PARLE™

ச்யூ சா சக் த்தாஷ்
தஸ் நாத்துக்
டிஷ் நம்ம்...?





சுவை
பேசும்
பாஷை




mango
bite

ஒரு மேங்கோபைட் சுவையுங்கள்
பிறகு மேங்கோபைட் பாஷையைப் பேசுங்கள்.

everest/2003/PP/32 tm

கடந்த இரண்டாண்டுகளாக
உங்களை மெய் சிலிர்க்க வைத்த
புராணத் தொடரான

# விநாயகர்

இந்த இதழுடன் முடிவடைகிறது





அடுத்த இதழிலிருந்து
சுவாரசியமானதும் படிக்கப்
பரவசமூட்டுவதும், கண் கவர்
வண்ணப் படங்களோடு உங்கள்
மனதைக் கவரும்
புராணத் தொடர் கதை

# மகா விஷ்ணு

ஆரம்பமாகிறது.

உங்கள் பிரதியை (ஜனவதி 2004)
இன்றே பதிவு செய்து விடுங்கள்.



அம்புலிமாமா
சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 டிசம்பர் : 2003 புன்னகை : 10



மாய மந்திரவாதி

13



நவீன வேதாளக் கதை

19



இந்தியப் புராதனக் கதைகள்

26



விநாயகர்

45



## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

*இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/-* **புக்போஸ்டில்** *உங்கள் சந்தாத் தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ* **சந்தமாமா இந்தியா லிமிடெட்** *என்ற பெயரை எழுதி அனுப்பவும்.*



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# விளையாட்டுகள் வழங்குவோர்

இந்தியா 1951ல் முதலாவது ஆசிய விளையாட்டுகளை நடத்தியது. 1982 லும் எட்டாவது ஆசிய விளையாட்டுகள் நடைபெற்றன. தற்போது ஆசிய ஆப்பிரிக்க விளையாட்டுகள் ஹைதராபாத்தில் நடந்து முடிந்துள்ளன. இரு பெரிய கண்டங்களின் நாடுகள் இவ்வாறு நெருங்கி வருவது மகிழ்ச்சி தருவதே.

இந்தியர்கள் இம்மாதிரியான உலகவிளையாட்டுகளில் கலந்து கொண்டு வெற்றிவாகை சூடுவது நம் இளைஞர்களுக்கு உற்சாகத்தை மூட்டி இவ்விளையாட்டுகளில் கலந்து கொள்ள ஊக்குவிக்கிறது. அரசாங்கங்களும் நிதி ஒதுக்கி விளையாட்டுகளுக்கும் விளையாட்டு வீரர்களுக்கும் ஆதரவு அளிக்கின்றன. பல் நாட்டு நிறுவனங்கள் தம் தயாரிப்புகளின் விற்பனையை அதிகரித்துக் கொள்ள விளையாட்டுகளை அளித்து விளையாட்டு வீரர்களையும் ஆதரிக்கின்றன.

இவையாவும் மகிழ்ச்சியை அளித்தாலும் இதன் மறுபக்கத்தையும் பார்க்க வேண்டும். இது கட்டுப்பாட்டைப் பற்றியது. இது பற்றி அதிகமாக இந்த நிறுவனங்கள் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

விளையாட்டுகள் தனிப்பட்ட மனிதனின் உடல் நலனுக்கும் நாட்டின் நலனுக்கும் மிகவும் தேவையானதே. பணம் செலவாவதும் எச்சரிக்கையுடன் நடந்து நம் விளையாட்டு வீரர்கள் நற்பயனை அடையவும் இருக்க வேண்டும். 2004 ஒலிம்பிக் ஆண்டில் ஒழுங்கோடு கட்டுப்பாட்டுடன் இருந்து நம் விளையாட்டு வீரர்கள் தம் திறன்களை வெளிப்படுத்துவார்களாக.

ஆசிரியர் : **விஸ்வம்**








# தண்ணீரை வீணாக்காதே



ஒரு நாள் வீணாவின் வகுப்பினர் அனைவரையும் பள்ளி நிர்வாகம் ஒரு கிராமத்திற்கு அழைத்துச் சென்றது. திரைப்படங்களில் வருவதுபோல் பசுமையான வயல்களும் நீரோடைகளும் நிரம்பிய ஒரு கிராமத்தை கற்பனை செய்து கொண்டு சென்ற வீணாவுக்கு, அவள் பார்த்தது ஏமாற்றத்தை கொடுத்தது.

அந்த கிராமம் வாடிய தாவரங்களும், உலர்ந்த பூமியுமாக வறண்டு போய் காட்சியளித்தது. கிராமத்து தலைவர் வீட்டில் தங்கியிருந்த வீணா அவர்களிடம் குடிக்க தண்ணீர் கேட்டாள். அவர்கள் வீட்டில் தண்ணீரே இல்லை. அப்போதுதான் அந்த வீட்டுப் பெண் வெளியிலிருந்து இரண்டு பானைகளில் தண்ணீர் எடுத்துக் கொண்டு திரும்பினாள். கிராமத்து கிணறுகளும் ஏரியும் வறண்டு விட்டதால், மூன்று மைல் தூரம் நடந்து போய் தூரத்திலிருந்த ஆற்றிலிருந்து அந்தப் பெண் குடி தண்ணீர் கொண்டு வந்திருந்தாள். தன்வீட்டில் குழாயை திறந்தாலே தண்ணீர் வருவதை பார்த்திருந்த வீணாவுக்கு இது அதிர்ச்சியாக இருந்தது.

கிராமத்திலிருந்து திரும்பி பள்ளியை அடையும் சமயம், பொதுச்சாலையில் உள்ள ஒரு குழாயிலிருந்து தண்ணீர் வீணாகக் கொட்டிக் கொண்டு இருந்தது. வீணாவின் ஆசிரியை விரைந்து சென்று அதை மூடினாள். ''குழந்தைகளே இவ்வாறு தண்ணீர் வீணாவதை நீங்கள் எங்கு பார்த்தாலும் அதைத் தடுக்க வேண்டும். பல் துலக்கும் போது, குழாய் தண்ணீரை திறந்து வைக்கக் கூடாது. குளிக்கும்போது குழாயைத் திறந்து வீணாக்காமல் ஒரு வாளியில் பிடித்து குளிக்க வேண்டும். வாளித் தண்ணீரில் தான் தோட்டத்து செடிகளுக்கு தண்ணீர் விடுவதோ கார் சுத்தம் செய்வதோ செய்ய வேண்டும். தண்ணீர் இயற்கை நமக்கு அளித்துள்ள ஒரு முக்கியமான பொருள். அதை வீணாக்காமல் சிக்கனமாக செலவழித்தல் வேண்டும்'' என்றாள் ஆசிரியை.



# பணம் திரும்பக் கிடைத்தது

**மா**ட்டூரில் வாரம் ஒரு முறை புதன் கிழமைகளில் மாட்டுச் சந்தை நடைபெற்று வந்தது. ஒருமுறை சீனன் என்பவன் நல்ல பசுவாக வாங்க ஒரு செவ்வாய்க் கிழமை இரவில் அவ்வூருக்கு வந்தான். அவ்வூரில் அயலூரிலிருந்து வருபவர்கள் தங்க ஒரே சத்திரம் தான் இருந்தது. சீனன் அங்கு போய் சத்திரத்து நிர்வாகி பசுபதியிடம் ஒரு பையைக் கொடுத்து ''இந்த ஐநூறு ரூபாயை பத்திரமாக வைத்திருந்து நாளை காலையில் நான் கேட்கும் போது கொடுங்கள்'' என்றான்.

பசுபதியும் பணத்தை வாங்கி வைத்து கொண்டான். பசுபதி ஏமாற்றுப் பேர்வழி. சீனன் கொடுத்த பணத்தை அவன் தன்னதாக்கி கொள்ளத் தீர்மானித்தான்.

மறுநாள் காலை சீனன் பசுபதியிடம் தான் கொடுத்த பணத்தைக் கொடுக்கும்படி கேட்டான். பசுபதியோ ''பணமா? நீ என்னிடம் எதுவும் கொடுக்கவில்லையே'' என்று பட்டென்று கூறி அதட்டி சத்திரத்திலிருந்து விரட்டி விட்டான். சீனன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டே சத்திரத்தில் இருந்து வெளியே வந்தான். அப்போது அவன் பின்னாலேயே வந்த ஒருவன் சீனனைப் பார்த்து ''நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு தான் இருந்தேன். இந்தப் பசுபதி உங்களை ஏமாற்றி விட்டான். உங்கள் பணம் கிடைக்க வேண்டும் என்றால் நீங்கள் இதே தெருவிலுள்ள பரமேசுவரனைப் பாருங்கள். அவர் ஏதாவது வழி சொல்வார்'' என்றான்.

சீனனும் உடனே பரமேசுவரனின் வீட்டிற்குப் போய் தன்னைப் பசுபதி ஏமாற்றிவிட்டதை விவரமாகக் கூறினான். பரமேசுவரனும் ''சரி. நீ அடுத்த செவ்வாயன்று ஐநூறு ரூபாயுடன் வா... உன் பணத்தைப் பசுபதி

- சிந்துஜா சங்கர் -

திருப்பிக் கொடுக்க வழி செய்கி றேன்'' என்றான். சீனனும் ஐநூறு ரூபாயுடன் மறு செவ்வாய் கிழமை பரமேசுவரனின் வீட்டிற்கு வந்தான். அப்போது பரமேசுவரன் தன்னோடு இருந்த ஒருவரை சீனனுக்குக் காட்டி'' இவர் இந்த ஊரின் கிராம அதிகாரி. இவர் இப்போது உன்னோடு சத்திரத் திற்கு வருவார். இவர் முன்னி லையில் நீ பசுபதியிடம் பணத்தைக் கொடுத்து மறுநாள் காலையில் வாங்கிக் கொள்வதாகச் சொல். பசுபதியும் பணத்தை வாங்கி கொள்வான். நீ நாளைக் காலையில் அவனிடம் கொடுத்த பணத்தை கேள். அவன் உடனே கொடுத்து விடுவான். அதை வாங்கிக் கொண்டு இங்கே வா'' என்றான்.

சீனனனும் கிராம அதிகாரியைக் கூட்டிக் கொண்டு சத்திரத்திற்குச் சென்றான். அவர் முன்னிலையில் அவன் ஐநூறு ரூபாயைப் பசுபதி யிடம் கொடுத்து ''இந்தப் பணத்தை நீங்கள் வைத்திருங்கள். நாளைக் காலையில் வாங்கிக் கொள்கிறேன்'' என்றான். பசுபதியும் பணத்தை வாங்கிக் கொண்டான். சீனன் இரவில் சத்திரத்தில் தங்கினான். காலையான தும் அவன் எழுந்து போய் தன் பணத் தைக் கொடுக்கும்படிக் கேட்கவே, பசுபதியும் பணத்தைக் கொடுத்து விட்டான்.

சீனனும் உடனே பணத்தோடு பரமேசுவரனின் வீட்டை சென்ற டைந்தான். அப்போது கிராம அதி காரியும் அங்கே இருந்தார்.

பரமேசுவரனும் ''இப்போது இவரோடு சத்திரத்திற்குப் போ'' என்றான். சீனனும் கிராம அதிகாரி யுடன் மறுபடியும் சத்திரத்திற்குச் சென்றான். கிராம அதிகாரியும் பசுபதியிடம், ''நேற்று இவர் கொடுத்தப் பணத்தை எடுத்து வந்து கொடு'' என்றார்.

பசுபதி திகைத்துப் போனான். ஆனாலும் சமாளித்துக் கொண்டு பணத்தை கொண்டு வந்து கொடுத் தான். கிராம அதிகாரியும் ''சீனா! உன் பணம் உனக்குக் கிடைத்து விட்டது இனி நாம் போகலாம்'' என்றார்!





# நிமிர்ந்து நடந்தான்!

**மா**யாபுரி மன்னன் மகேந்திர பூபதி தன் ஒரே மகன் ரவீந்திர பூபதியும் தன்னைப் போல வீரமும் தீரமும் மிக்கவனாய் இருந்து மன்னனாக வேண்டும் என்று விரும்பினான். அதனால் ரவீந்திரன் போர்க் கலையையும் ஆட்சி, அரசியல் ஆகியவற்றையும் நன்கு பயில ஏற்பாடு செய்தான். ரவீந்திரன் அவற்றை எல்லாம் கற்றபின் அரண்மனையில் தன் அறைக்குள்ளேயே இருந்து ஏதோ யோசித்த வாறும் அவ்வப்போது ஓவியங்கள் வரைந்தும் பொழுதைப் போக்கி வந்தான். எப்போதாவது அவன் தனியாகக் காட்டுப் பகுதிகளுக்குச் சென்று இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்து விட்டு வரலானான்.

தன் மகனின் இந்தப் போக்கைக் கண்ட மகேந்திர பூபதி ஒருநாள் அவனிடம் ''மகனே நீ இப்படி எதிலும் பட்டும் படாமல் இருப்பது சரியல்ல. இந்த வயதில் சுறுசுறுப்பாக நீ இருந்து ஆட்சி முறையைக் கவனிக்க வேண்டும். எதிலும் பற்றில்லாமல் தனியாக உட்கார்ந்து எப்போதும் ஏதோ யோசிப்பது சரி அல்ல'' என்றான்.

அதற்கு ரவீந்திரன் ''தந்தையே! எனக்கு அரண்மனை ஆடம்பர வாழ்வு பிடிக்கவில்லை. ஏதோ ஒரு புதுமையைக் காண என் மனம் துடிக்கிறது. கொஞ்ச நாட்கள் நான் அரண்மனையில் வசிக்காமல் நம் நாட்டின் பல பகுதிகளைக் கண்டு வர விரும்புகிறேன். அதற்கு அனுமதி கொடுங்கள்'' என்று வேண்டினான்.

அதைக் கேட்ட மகேந்திர பூபதி சற்று யோசித்து விட்டு ''மகனே! நீ இந்த நாட்டின் மன்னனாகப் போகிறவன். நீ ஒரு அரச குமாரியை மணந்து கொள். அப்போது தான் உனக்கு வாழ்வில் பிடிப்பு ஏற்படும். உற்சாகம் அடைவாய். நான் உனக்கு

- காரை குரு மூர்த்தி -



சில அரச குமாரிகளின் உருவப் படங் களை நான் காட்டுகிறேன். அவர் களில் யாராவது ஒருத்தியைத் தேர்ந்து தெடு. அவளை உனக்கு மண முடித்து வைக்கிறேன்'' என்றான். ரவீந்திரன் பதில் எதுவும் கூற வில்லை. ஆனால் மகேந்திர பூபதியோ சில அரச குமாரி களின் உருவப்படங்களை வர வழைத்துக் காட்டினான்.

அவற்றைப் பார்த்த ரவீந்திரன் எதையுமே தேர்ந்து எடுக்கவில்லை. ஆனால் மகேந்திர பூபதியோ அழகா புரி மன்னனின் மகள் அர்ச்சனாவைத் தன் மகனுக்கு விவாகம் செய்து வைத்து விடுவது என்று தீர்மானித்து விரைவிலேயே அவளை ரவீந்திர னுக்கு திருமணம் முடித்து வைத்தும் விட்டான்.

ஆனால் திருமணம் நடந்ததுமே ரவீந்திரன் யார் கண்ணிலும் படாமல் எங்கோ போய் விட்டான். கணவன் முகத்தைக் கூட அர்ச்சனா நேருக்கு நேர் நின்று பார்த்தது இல்லை. அவனது உருவப் படத்தைத் தான் பார்த்திருந்தாள். எனவே அன்றிரவு தன் கணவனை முதல் தடவையாக நேருக்கு நேராகப் பார்க்கலாம் என்று அவள் எண்ணியது நடக்கவில்லை.

திருமணம் நடந்ததும் ரவீந்திரன் தன் குதிரை மீது அமர்ந்து வேகமாக அதனை ஓட்டி இரண்டு நாட்கள் எங்கும் நிற்காமலே சென்றான். பசி, தாகம் அவனை வாட்டவே களைத்துப்போய் அவன் குடிக்கத் தண்ணீராவது கிடைக்குமா என்று ஓரிடத்தில் நின்று சுற்றிலும் பார்த் தான். சற்றுத் தொலைவில் ஒரு சிற்றோடையைக் கண்டு அங்கு செல்வதற்காகத் தன் குதிரையில் இருந்து கீழே இறங்கினான்.

அவன் ஒரு அடி எடுத்து வைத்த துமே சட்டென நின்றான். அதற்குக் காரணம் அந்த ஓடையில் அழகிய பெண் ஒருத்தி குளித்துக் கொண்டிருந் தாள். அவளைக் கண்டு ரவீந்திரன் மெய் மறந்து போய் நின்றான். சற்று நேரமான பின் அந்த இளநங்கை ஓடையிலிருந்து கரை ஏறி வந்தாள். அவள் ரவீந்திரனைக் கண்டதும் பயந்து விட்டாள். அப்போது ரவீந்திரன் அவள் பயப்பட வேண் டாம் என்று சைகையால் உணர்த்தி னான் பிறகு அவன் மெல்லிய குரலில் ''பெண்ணே! பயப்படாதே. நான் தண்ணீர் குடிக்கவே இந்த ஓடைக்கு

வந்தேன். ஆமாம். நீ யார்? அதை நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்டு அவள் பயம் நீங்கியவளாய் ''என் பெயர் சந்திரிகா. நான் ஒரு சிற்றரசனின் மகள். நீங்கள் இப்போதே இங்கிருந்து போய் விடுவதே உங்களுக்கு நல்லது'' என்றாள். அது கேட்டு அவன் மனம் துள்ளியது. அவன் ''நான் போக மாட்டேன். இங்குள்ள இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிக்கப் போகிறேன். ஒரு சில நாட்கள் இங்குள்ள ஏதாவது ஒரு மலைக் குகையில் இருக்கப் போகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட சந்திரிகா ''எம் கூட்டத்தவர் உங்களைப் பார்த்து விட்டால் பிடித்து லேசில் விட மாட்டார்களே'' எனவே ரவீந்திரனும் ''அவர்களால் என்ன செய்து விட முடியும் என்பதைப் பார்க்கிறேனே. அதனால் இங்கேதான் இருப்பேன்.'' என்று உறுதியாகக் கூறினான். அதைக் கேட்ட சந்திரிகா ''சரி நீங்கள் இருக்க ஒரு குகையைக் காட்டுகிறேன். தினமும் உங்களுக்கு உணவும் கொண்டு வந்து கொடுக்கிறேன்'' என்று கூறி விட்டுச் சட்டென்று அங்கிருந்து சென்று விட்டாள்.

சந்திரிகா ரவீந்திரனுக்கு தினமும் உணவு கொண்டு வந்து கொடுத்ததோடு பல பழங்களையும் கொடுத்தாள். ஒருநாள் அவள் வண்ணங்களையும் ஒரு தூரிகையையும் கொண்டு வந்து ரவீந்திரனிடம் ''இவற்றை யாரோ இக்காட்டில் விட்டு விட்டுப் போயிருக்கிறார்கள். இவை உங்களுக்குப் பயன் படுமா?''



அவற்றைக் கண்ட ரவீந்திரன் மகிழ்ந்து சந்திரிகாவைப் பல கோணங்களில் ஓவியங்களாக வரைந்தான்.

இப்படியே பத்து நாட்கள் கழிந்தன. ஒரு நாள் சந்திரிகா மிகவும் கவலைப்பட்டவாறே ரவீந்திரனிடம் ''நீங்கள் வேறு எங்காவது இப்போதே போய் விடுங்கள். எங்கள் இனத்தவருக்கு உங்களைப் பற்றி எப்படியோ தெரிந்து விட்டது. எவ்வித ஆயுதமும் உங்களிடம் இல்லையே. அவர்களோடு உங்களால் எப்படி எதிர்த்துப் போரிட முடியும்?'' என்று கேட்டாள்.

அப்போது ரவீந்திரன் ''சந்திரிகா! எதிலும் பற்றில்லாத என்னை உற்சாகப் படுத்தி வாழ்வு என்பது என்ன என்பதை எனக்கு நீ உணர்த்தி விட்டாய். இப்போது நான் வாழ எண்ணம் ஏற்பட்டு விட்டது. முன்பு இருந்த விரக்தி போய் விட்டது. உன்னை விட்டு நான் பிரிந்து போகவே மாட்டேன். என் உன்னை மணந்து கொள்கிறேன்'' என்றான்.

அப்போது ஒரு மரத்தின் பின்னாலிருந்து மகேந்திர பூபதி அவர்களருகே வந்து ''எங்கள் அனுமதி கிடைத்து விட்டது. ரவீந்திரா! இந்த சந்திரிகா வேறு யாருமில்லை, நீ மணந்து கொண்ட அரசகுமாரி அர்ச்சனா தான் இவள். உன்னைத் தேடிக் கொண்டு வந்து உனக்கு ஒரு மனைவி செய்ய வேண்டிய பணிகளை எல்லாம் செய்தாள். உன்னைத் தேடிக் கண்டு பிடித்த பின் உன் மனதை மாற்ற என்ன செய்யலாம் என்று யோசித்தேன். இது நான் அவளிடம் கூறிய யோசனை. அது நன்கு நடந்து விட்டது'' என்று கூறி மகிழ்ந்தான்.

இதன் பின் மூவரும் தலை நகருக்குச் சென்றனர். மகேந்திர பூபதி ரவீந்திரனை அரியாசனத்தின் அமர்த்தி ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்து விட்டு ஓய்வு பெற்றான்.





# மாய மந்திரவாதி

பல நூற்றாண்டுகளுக்கு முன் காளி வர்மன் என்பவன் பிரம்மபுத்திர நதிக்கரையில் இருந்த ஒரு காட்டின் சிறு கிராமத்தில் இருந்தான். அவனது தந்தை சந்திரசீல மன்னனின் படையில் போர் வீரனாகப் பணியாற்றி ஒரு போரில் இறந்து போனான். அப்போது காளிவர்மனின் வயது பத்து. அவனது தாயும் தன் கணவன் இறந்தது கேட்டு மாரடைப் பால் இறந்து போனாள். காளிவர் மனை அவனது தந்தையின் நண்பன் பலபத்திரன் தன் வீட்டில் வைத்துக் கொண்டு வளர்த்துப் போர்க் கலையை கற்பித்தான்.

காளிவர்மன் இருபதாவது வயதை அடைந்ததும் பலபத்திரன் அவனிடம் ''காளி! நீ இந்த ஊரை விட்டுத் தலைநகருக்குப் போய் அங்கு அரசாங்க வேலையில் சேர்ந்து கொள்'' என்றான். காளி வர்மனுக்கும் அப்படிப்பட்ட ஆசை இருந்த போதிலும் அவனுக்கு மன்னன் ஜீதகேது என்றால் சற்றும் மரியாதை இல்லை. ஏனெனில் மன்னன் மக்களிடமிருந்து வரி மட்டும் தான் வசூலிப்பதில் குறியாக இருப்பதாயும் மக்களுக்கு எவ்வித வசதியும் செய்து கொடுப்பதில்லை என்றே அவன் எண்ணினான். மேலும் நாட்டில் கொள்ளை கொலை அதிகரித்துக் கொண்டே போக மன்னன் அவற்றைத் தடுக்க எவ்வித முயற்சியும் எடுக்கவில்லை.

இதை காளிவர்மன் பலபத்திரனிடம் கூறி ''மன்னன் ஜீதகேது ஆளத் திறமையற்றவன் தொடை நடுங்கி. அவனுடைய படையில் சேர்ந்து பணி புரிவதை அவமானமாகக் கருது



கூறித் தன் வீட்டிற்குள் அழைத்து சென்றான். அங்கு ஒரு அறையின் கதவைத் திறந்து காளிவர்மனை அறைக்குள் அழைத்து சென்றான். அறையில் பலவித வாள், ஈட்டி, கவசம் என்றெல்லாம் இருந்தன. அவற்றில் ஒரு வாள் மட்டும் தங்கப் பிடி கொண்டதாக இருந்தது. பல பத்திரன் அந்த வாளை எடுத்து காளி வர்மனின் இடுப்பில் கட்டி ''காளி! நீ க்ஷத்திரியன். இதை உன் இடுப்பில் கட்டி நீ உண்மையான க்ஷத்திரியனாக நடந்து கொள்ள வேண்டும் என்று உன் தந்தை உன்னிடம் சொல்லச் சொன்னார்'' என்றான்.

கிறேன்'' என்றான். கிழ பலபத்திர னும் நிதானமாக ''மன்னன் தன் அதிகாரிகளை நம்பியே ஆட்சி புரி கிறான். இந்த மன்னனின் தந்தையின் ஆட்சியில் உன் தந்தை போன்ற நேர்மையானவர்கள் பணி புரிந் தார்கள். ஆனால் இந்த ஜீத கேதுவைச் சுற்றி நேர்மையற்ற அதிகாரிகளே இருக்கிறார்கள். அதனால் தான் நாட் டின் நிலைமை மோசமாகி விட்டது'' என்றான்.

காளிவர்மனும் ''இந்த நிலையைப் பார்த்துக் கொண்டு எல்லோரையும் போல நானும் கை கட்டி வாய் திற வாமல் இருக்கவா வேண்டும்?'' என்று கேட்டான். பலபத்திரனும் ''வேண்டாம் உன் தந்தை இறக்கு முன் தன் விருப்பத்தைக் கூறி விட்டுக் கண்மூடினார். அதைச் சொல்லுமுன் நீ என்னுடன் உள்ளேவா!'' என்று

காளிவர்மன் அங்கிருந்த கவசத் தை எடுத்து அணிந்து கொண்டான். அப்போது அவன் தன் உடலில் ஏதோ ஒரு சக்தி புகுந்து விட்டது போல உணர்ந்தான். அவன் வாளை உறையி லிருந்து உருவி ''என் தந்தையின் நோக்கம் புரிந்து விட்டது. நாட்டின் நிலையை சீர்திருத்த வேண்டும். அம்முயற்சியில் நான் இறங்கு கிறேன்'' என்றான். அது கேட்டு பலபத்திரன் மகிழ்ந்து காளிவர்மன் தலை நகருக்குப் போவதற்கான ஏற் பாட்டைச் செய்தான். மறுநாள் காளி வர்மன் கவசம் அணிந்து இடுப்பில் வாளைக் கட்டிக் கொண்டு வழிச் செலவிற்காக நூறு தங்க நாண யங்களோடு குதிரை மீது அமர்ந்து தன் ஊரிலிருந்து புறப் பட்டான்.

காளிவர்மன் போக வேண்டிய வழி ஒருகாட்டினுள் இருந்தது. உச்சி வேளை வரை பயணம் செய்த அவன்

பசி எடுத்ததும் ஓரிடத்தில் உட்கார்ந்து தான் கொண்டு வந்த உணவைச் சாப்பிட்டான். பிறகு தாகம் தீர்த்துக் கொள்ள எங்காவது ஏரி, ஓடை என்று இருக்கிறதா என்று சற்று தூரம் போய்ப் பார்த்தான். அப்போது ஒரு மரத்தின் மீதிருந்து யாரோ முனகும் குரலை அவன் கேட்டான். அப்போது தலை நிமிர்ந்து அவன் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அந்த மரத்திலிருந்து ஒரு கிழவன் 'பொத்'தென்று கீழே விழுந்தான்.



காளிவர்மன் தன் குதிரையிலிருந்து இறங்கி அக்கிழவனருகே சென்றான். அவன் அக்கிழவனிடம் ''இந்தத் தள்ளாத வயதில் மரத்தின்மேல் ஏன் ஏறினீர்கள்?'' என்று கேட்டான். கிழவனும் ''உன்னைப் பார்த்தால் மன்னனின் படை வீரன் போலத் தெரிகிறது. நீ வரி வசூலிக்க வந்தாயா?'' என்று மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்கக் கேட்டான்.

காளிவர்மனும் ''நான் படைவீரன் இல்லை. படையில் சேரத் தலை நகருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். ஆமாம் நான் கேட்ட கேள்விக்கு நீங்கள் பதில் சொல்லவில்லையே'' என்று கேட்டான். கிழவனும் ''எங்கள் ஊரில் கொள்ளைக்காரர்கள் புகவே, நான் பயந்து ஓடி வந்து இந்த மரத்தின் மேல் ஏறி மறைந்து கொண்டேன்'' என்றான். காளிவர்மனும் ''தாத்தா! இங்கு கொள்ளைக்காரர்கள் இருக்கிறார்களா? பகலில் கூடக் கொள்ளை அடிக்கிறார்களா?'' என்று கேட்டான். கிழவனும் ''என் ஊருக்குள் கொள்ளைக்காரர்கள் புகுந்து கொள்ளை அடிப்பதும் அப்போது ஊரார் ஊரை விட்டு ஓடிப் போவதும் வழக்கமாகி விட்டது. கொள்ளைக்காரர்கள் போன பின் ஊரார் திரும்பி வந்து தம் வீடுகளைச் சரிசெய்து கொண்டு வசிப்பார்கள்'' என்றான்.

அப்போது காளிவர்மன் ''கொள்ளைக்காரர்களைப் பற்றி யாரும் மன்னனிடம் புகார் செய்யவில்லையா?'' என்று கேட்டான். கிழவனும் ''புகாரா? கொள்ளைக்காரர்கள் தான் கொள்ளை அடிக்கிறார்கள் என்றால் அரசாங்க வீரர்களும் அவர்களுக்குச் சளைத்தவர்கள் அல்ல. அவர்களும் அவ்வப்போது வந்து வீட்டிலும் வயலிலும் உள்ள தானியங்களை எடுத்துக் கொண்டு

போய் விடுகிறார்கள். எங்கள் நிலை இப்படி உள்ளது'' என்றான்.

இச்சமயத்தில் நான்கு கொள்ளைக் காரர்கள் அங்கு வந்து விட்டார்கள். அவர்கள் காளிவர்மனைப் பார்த்து ''ஓ! நீ வரி வசூல் செய்ய வந்தவனா? மரியாதையாக நீ வைத்திருக்கும் பணப்பையை எடுத்துக் கீழே வைத்து விட்டுப்போ'' என்று மிரட்டினார்கள். காளிவர்மனும் பயந்தவன்போல அவர்களைப் பார்த்தவாறே தன் குதிரையருகே போய் அதன் மீதிருந்த சிறு உணவு மூட்டையை எடுத்துத் தரை மீது வைத்தான். கொள்ளைக் காரர்களில் ஒருவன் ஆவலுடன் அந்த மூட்டையை எடுக்கப்போனான். அப்போது காளிவர்மன் வாளை உருவி அவன் மீது பாய்ந்து அவனது தலையை வெட்டியதோடு இரு கொள்ளைக்காரர்களைத் தாக்கி அவர் களையும் குத்திக் கொன்றான்.

நான்காவது கொள்ளைக்காரன் தப்பி ஓட முயலவே காளிவர்மன் அவனைப் பிடித்து உலுக்கி ஓங்கி ஒரு உதை விட்டான். கொள்ளைக்காரன் அலறியவாறே கீழே விழுந்தான். அவனை இழுத்துக் கொண்டு காளி வர்மன் கிழவனருகே வந்தான். இதை எல்லாம் கண்ட கிழவன் காளி வர்மனைப் பார்த்து ''மகனே! என்ன வீரம்! என்ன தைரியம்!! மூன்று கொள்ளைக்காரர்களைக் கொன்று நாலாவது பேர்வழியைக் குற்றுயிராக இழுத்து வந்திருக்கிறாயே! உன் போன்ற ஒரு இளைஞனைப் பார்த்ததே இல்லை. எங்கள் ஊர் இளைஞர்களில் யாருமே இப்படித் துணிந்து கொள்ளைக்காரர்களைத்



தாக்கியதே இல்லை'' என்றான் நடுநடுங்கும் குரலில்.

காளிவர்மனும் ''அப்படியானால் நான் உங்களூர் இளைஞர்களுக்குப் போர் கலையில் பயிற்சி அளித்து விட்டுத்தலைநகருக்குச் செல்கிறேன். எனக்கு உன் ஊருக்குப் போக வழி காட்டு. இந்தக் கொள்ளைக்காரனை இழுத்துக் கொண்டு என் குதிரை யுடன் உன் பின்னாலேயே வருகி றேன்'' என்றான். இதற்குள் கிழவ னின் ஊர்க்காரர்கள் சிலர் அங்கு வந்தார்கள்.

அவர்களை கண்ட காளிவர்மன் ''உங்கள் எல்லோருக்கும் கை கால் கள் நன்றாகத் தானே இருக் கின்றன! கொள்ளைக்காரர்கள் உங்கள் ஊருக் குள் வந்தபோது நீங்க ளெல்லாம் ஒன்று கூடி அவர்களை எதிர்த்து அடித்து விரட்டாமல் பயந்து ஓடி விட்டீர்களே. உங்களுக்கு வெட்க மாய் இல்லை?'' என்று கேட்டான். அதைக் கேட்டு அவர்கள் எல்லோ ரும் தலை குனிந்து கொண்டார்கள். கிழவன் நடந்ததை எல்லாம் அவர்க ளிடம் கூறி ''இந்தச் சுற்று வட்டார இளைஞர்களெல்லாம் இந்த வீர னைத் தலைவனாக ஏற்றுப் போர்க் கலையைக் கற்க வேண்டும். அப் போது கொள்ளைக்காரர்களை அழிக்க முடியும். எவ்வளவு நாட்களுக்குத் தான் நாம் கொள்ளைக் காரர்களுக்கு பயந்து கொண்டே இருப்பது?'' என்றான்.

காளிவர்மனும் ''பெரியவர் சொல்லிவிட்டார். அதன்படி நடந்து



கொள்ளைக்காரர் பயமே இல்லாது செய்யுங்கள். இந்தக் கொள்ளைக் காரனை விசாரித்தால் கொள்ளைக் காரர்களைப் பற்றிய விவரங்கள் தெரிந்து விடும். நான் சில நாட்கள் உங்கள் ஊரிலேயே இருந்து இப் பகுதியில் உள்ள இளைஞர் களுக்குப் போர்க்கலையில் பயிற்சி அளிக் கிறேன். அவர்கள் கொள்ளைக்காரர் களைப் பிடித்து ஒழிக்கட்டும்'' என்றான்.

எல்லோரும் அதன்படி நடப் பதாகக் கூறி காளிவர்மனைத் தம் ஊருக்கு அழைத்துச் சென்றார்கள். அப்பகுதி முழுவதிலும் இளைஞர் களுக்கு காளிவர்மன் பயிற்சி அளிக்கப்போவது அறிவிக்கப் பட்டது. பல இளைஞர்கள் பயிற்சி பெற அந்த ஊருக்கு வந்து சேர்ந் தார்கள். காளிவர்மனும் அவர்

களுக்குப் போர்க்கலையில் நல்ல பயிற்சி அளித்தான். அதன்பின் காளிவர்மனின் தலைமையில் கொள்ளைக்காரர்களை வேட்டை யாடிப் பிடித்து ஒழிக்கும் வேலை ஆரம்பமாகியது. பல கொள்ளைக் காரர்கள் கொல்லப் பட்டார்கள். சிலர் பிடிபட்டார்கள். வேறு சிலர் தப்பி அண்டை நாட்டிற்கு ஓடிப் போனார்கள்.

இதனால் திருப்தி அடைந்த காளிவர்மன் அந்த ஊராரிடம் விடை பெற்றுக் கொண்டு தலை நகருக்குக் கிளம்பினான். பதினைந்து நாட்கள் பயணம் செய்து அவன் ஒருநாள் உச்சி வேளையின் போது சந்திரசிலா நகர எல்லையில் அடி எடுத்து வைக்கையில் அரசாங்க வீரர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களின் தலைவன் அவனைப் பார்த்து கோபமாக ''அடே! நீ தான் காளிவர்மன் என்பவனா? கொள்ளைக்காரர்களை அண்டை நாட்டிற்கு விரட்டிய சூரப் புலி நீதானா?'' என்று தன் வெறுப்பைக் காட்டியவாறே கேட்டான்.

காளிவர்மனும் ''ஆகா! கொள்ளைக்காரர்களை நம் நாட்டில் இருந்து விரட்டிய எனக்கு இப்படி ஒரு வரவேற்பா? எனது நற்பணிக்கு இதுவா பரிசு?'' என்று கேட்டான். அதற்கு அத்தலைவன் ''அடே! நீ செய்தது நற்பணி அல்ல. ராஜத்து ரோகம். ஓடிப்போன கொள்ளைக் காரர்கள் அண்டை நாட்டில் கொள்ளை அடித்துக் கொண்டு இருக்கிறார்கள். அந்நாட்டு மன்னனோ நம்மன்னர் தாம் கொள்ளைக்காரர்களைத் தூண்டி விட்டு அவ்வாறு செய்யச் சொன்னதாக எண்ணி நம் நாட்டின் மீது படை எடுத்து வரப்போகிறானாம். இப்படிப்பட்ட நிலைமை உருவானதற்கு நீதான் காரணம்'' என்றான். காளிவர்மன் ''இதென்ன பிதற்றல்? நான் துரோகி. இல்லை.' எனக் கூறவே நான்கு வீரர்கள் அவனைப் பிடித்து அவனது கைகால்களைக் கட்டி ஒரு குதிரை மீது போட்டுக் கொண்டு உற்சாகத் துடன் சென்றார்கள்.

(தொடரும்.)



நவீன
வேதாளக்
கதை

# யார் தகுதி பெற்றவன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல் கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ விடா முயற்சி யாக இச்செயலில் ஈடுபட்டி ருப்பது நீ நியாயம் என்று நினைப்பதைச் செய்து விட வேண்டும் என்று எண்ணு வதையே வெளிப் படுத்து கிறது. உன் போலத் தான் சாந்தவர்மனும் எண்ணி ஒரு முடிவை எடுத்தான். அவன்



கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல லாயிற்று.

சாந்தவர்மனுக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். மூத்த மகன் குணவர்மன். இளையவன் பெயர் தீரவர்மன். குணவர்மன் அமைதியை விரும்புபவன். பகட்டை விரும்பாதவன். தீரவர்மனோ அவனுக்கு நேர்மாறான இயல்பு கொண்டவன். இரு அரச குமாரர்களும் எல்லாக் கலைகளையும் பயின்று பெரியவர்களானார்கள். அப்போது சாந்தவர்மன் சம்பிரதாயப்படி மூத்தமகன் குணவர்மன் தனக்குப் பின் மன்னனாக வேண்டும் என்று எண்ணினான். இதை அறிந்த தீரவர்மன் ''தந்தையே! நான் தான் தங்களுக்குப் பிறகு இந்நாட்டின் மன்னனாக வேண்டும். நான் எந்த விதத்திலும் அண்ணனை விடத் தாழ்ந்து விடவில்லை'' என்றான்.

சாந்தவர்மனும் ''நீ குணவர்மனுக்குத் தாழ்ந்தவன் அல்ல என்றாலும் அவன் என் மூத்தமகன். அரச குடும்பத்தில் பிறந்த மூத்த மகன் தான் தந்தைக்கு பின் நாட்டின் மன்னனாக வேண்டும் என்பது தொன்று தொட்டுக் கடைப்பிடித்து வரப்படும் விதி. மூத்தவன் இருக்க இளையவனுக்குப் பட்டம் அளிக்கக் கூடாது. எனவே உன் அண்ணன் தான் எனக்குப் பின் நாட்டை ஆள உரிமை பெற்றவன்'' என்றான். இதை எல்லாம் கேட்ட குணவர்மன் ''தந்தையே! நான் தங்களுக்குப் பின் மன்னனாக வேண்டாம். தம்பியே மன்னனாகி விடட்டும். நான் ஆட்சியில் அவனுக்குத் துணையாக இருக்கிறேன்'' என்றான். அதைக் கேட்ட தீரவர்மன் ''தந்தையே! அண்ணனே தான் மன்னனாக வேண்டும் என்று விரும்பவில்லை என்று கூறி விட்டதால் என்னை மன்னனாக்க ஆட்சேபணை எதுவும் இல்லையே'' என்றான்.

சாந்தவர்மனோ ''மூத்த அரச குமாரன் தனக்கு மன்னர் பட்டம் தேவை இல்லை என்று கூறிவிட்டால் அடுத்து அவனது தம்பியைத் தான் மன்னனாக்க வேண்டும் என்ற சட்டமோ சம்பிரதாயமோ எதுவுமில்லை. நாட்டிலுள்ள எந்தத் தகுதி வாய்ந்த குடிமகனையும் மன்ன

னாக்கி விடலாம்'' என்றான். தீரவர்மனோ ''அரச குடும்பத்தில் பிறந்தவன். மன்னனானாலே மக்கள் கௌரவமாக அவனைப் பார்ப் பார்கள். எனக்கோ எல்லாத் தகுதிகளும் உள்ளன. நான் அரச குடும்பத்தில் பிறந்தவன். அரச குமாரர்கள் கற்றுத் தேர்ச்சி பெற வேண்டிய எல்லாக் கலைகளையும் கற்றவன். எனவே நான் தான் மன்னனாக வேண்டும்'' எனப் பிடிவாதம் பிடித்தான்.

அப்போது சாந்தவர்மன் ''மக்கள் குணவர்மனைப் பெரிதும் மதிப் பதால் தான் அவனையே மன்னனாக்க விரும்புகிறேன். அவன் பொறுமை சாலி. அமைதியான முறையில் நடந்து செயல்படுபவன். யாரிடமும் கோபப் படாமல் அன்புடன் இனிமை யாகப் பேசுபவன். எனவே அவன் மன்னன் ஆவதைத் தான் மக்கள் ஆவலுடன் எதிர் பார்க்கிறார்கள்''. எனவே தீரவர்மன் ''இதை நான் நம்ப மாட்டேன், என்றான்.'' சாந்த வர்மனும் ''சரி அதைப் பரீட்சிக் கலாம். நீங்கள் இருவரும் நாட்டின் பல பகுதி களுக்குச் சென்று வாருங்கள்.

அப்போது உங்களுக்குக் கிடைக் கும் வரவேற்பைக் கொண்டு யாரை மக்கள் அதிகமாக விரும்பு கிறார்கள் என்று கண்டு கொள்ளலாம்'' என்றான். தந்தையின் விருப்பப்படி இரு அரச குமாரர்களும் நாட்டில் பல பகுதிகளுக்குச் சென்று வந்தார்கள்.



மக்கள் இரு அரச குமாரர்களைப் பற்றி நன்கு அறிந்திருந்தார்கள். அதனால் தீர வர்மனை வரவேற்பதில் தயக்கம் காட்டினார்கள். குணவர் மனையோ படாடோபம் இல்லாமல் மகிழ்ச்சியுடன் மிக்க மரியாதையாக வரவேற்றார்கள்.

அப்போது சாந்தவர்மன் தீரவர் மனிடம் ''மக்கள் யாருக்கு அதிகம் மரியாதை செய்தார்கள் என்று தெரிந்து கொண்டாயா?'' என்றான் தீரவர்மனோ'' மக்கள் என்னயும் தான் வரவேற்றார்கள். சிலர் தயக்கம் காட்டி இருக்கலாம். அதனால் மக்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்று ஆகிவிடாது'' என்றான். அப்போது சாந்தவர்மன் ''சரி, ஒரு பரீட்சை வைக்கிறேன். நகர எல்லையில் மூன்று பனை மரங்கள் உள்ளன.



முன்பு அவற்றில் துஷ்டகிரகங்கள் இருக்கின்றன என்று அரசாங்க ஜோசியர் கூறியதால் அவற்றை என் வாளைக் கொண்டு ஒரே வெட்டில் வெட்டிச் சாய்த்தேன். சாதாரணமாக வெட்டப்பட்ட பனை மரங்கள் மீண்டும் முளைப்பதில்லை. ஆனால் நான் வெட்டிய மரங்கள் இப்போது மீண்டும் வளர்ந்து விட்டன. இதற்குக் காரணம் மறுபடியும் துஷ்டகிரகங்கள் வந்து அம்மரங்களில் வசிப்பதே யாகும். நீ அந்த மரங்களை ஒரே வெட்டில் வெட்டி அந்தக் கிரகங்களை விரட்டுகிறாயா?'' என்று கேட்டான்.

அதற்கு தீரவர்மன் ''அண்ணன் முதலில் அவற்றை வெட்டித் தன் திறமையை வெளிப்படுத்தலாமே'' என்றான். குணவர்மனும் ''என்னால் வெட்ட முடியும். நான் அவற்றை வெட்டி விட்டால் தம்பிக்கு வெட்ட எதுவும் இராதே. அவன் தன் திறமையைக் காட்ட வாய்ப் பில்லா மல் போய் விடும். அவன் மன்னனாக ஆசைப் படுவதால் முதலில் அவன் முதலில் முயன்று பார்க்கட்டும்'' என்றான். தீரவர்மனும் ''அதுவும் சரிதான். நானே முதலில் வெட்டு கிறேன்'' என்றான். அப்பனை மரங்கள் வளர்ந்திருந்த இடத்திற்கு எல்லோரும் சென்றார்கள். தீரவர்மன் ஒரே வெட்டில் அந்த மூன்று மரங்களையும் வெட்டி எல்லோ ரையும் திகைக்க வைத்தான்.

அப்போது சாந்தவர்மன் ''நீ என்னைப் போல பிறருக்கு நன்மை செய்ய எண்ணி இதைச் செய்ய வில்லை. மன்னனாக வேண்டும் என்ற சுயநலத்தில் செய்தாய். மேலும் குணவர்மனின் திறமையைக் கண்டறிய வாய்ப்பும் இல்லாமல் போய் விட்டது. அடுத்து ஒரு பரீட்சை வைக்கிறேன். உங்கள் இருவருக்கும் ஆளுக்கு ஒரு நகரை அவரவர் இஷ்டப் படி ஒரு வருடம் ஆள்வதற்குக் கொடுக்கிறேன். அதில் யார் சிறந்தவராக வெளி வருகிறார் என்று பார்க்கலாம்'' என்று கூறி குணவர்மனுக்கு மதிபுரத்தையும் தீரவர்மனுக்கு சத்திய புரத்தையும் கொடுத்தான். இருவரும் அந்நகர் களுக்குச் சென்றார்கள்.

மதிபுரத்தை அடைந்த குணவர்மன் அவ்வூர் பிரமுகர்களையும் அறிஞர் களையும் கூட்டி அவ்வூரின்

வளர்ச்சிக்கான வழிகளை அவர்க ளோடு பேசி வகுத்தான். நகரவாசி களின் நலனைக் கருத்தில் கொண்டு அவர்கள் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தான். அவனை யார் எப்போது வேண்டு மானாலும் பார்த்து தம்பிரச்சினைகளைக் கூற லாம் என்று கூறியும், கர்வப் படாமல் பொது மக்களுடன் தாராள மாகப் பழகி அவர்கள் ஏற்பாடு செய்யும் நிகழ்ச்சிகளில் எல்லாம் கலந்து கொண்டும் வந்தான்.

தீரவர்மன் சத்திய புரியை அடை ந்து நகர நிர்வாகத்திற்குத் தனக்கு வேண்டியவர்களை அதிகாரி களாக நியமித்தான். அவர்களது யோசனை களின்படி நிர்வாகத்தை நடத்தினான். அவர்கள் கூட்டிய கூட்டங்கள் ஆடம்பரமானவை. மக்கள் தீரவர்ம னிடமிருந்து சற்றுத் தொலைவி லேயே இருக்க வேண்டி வந்தது. அதனால் மக்களால் அவனைக் கண்டு தம் குறைகளைக் கூற முடியவில்லை.

அவர்கள் அதிகாரிகளிடமே அவற்றைத் தெரிவிக்க வேண்டிய தாயிற்று. அதிகாரிகளோ தமக்கு வேண்டியவர்களுக்கும், லஞ்சம் கொடுப்போருக்கும் அவர்கள் விரும் பியதை நிறைவேற்றி வந்தார்கள். அதிகாரிகள் கூறுவதைக் கேட்டு தீரவர்மன் மக்கள் தன்னை மிகவும் விரும்புவதாக நம்பி விட்டான்.

இப்படியாக ஒரு வருட காலம் கழிந்தது. மீண்டும் குணவர்மனும் தீரவர்மனும் தலைநகருக்குத் திரும்பி



வந்தார்கள். சாந்தவர்மனும் அவர் களைப் பார்த்து ''உங்கள் இருவரது ஆட்சிகளைப் பற்றி விவரமாக தெரிந்து விட்டது. அதன் அடிப் படையில் குணவர்மன் தான் எனக்குப் பின் மன்னனாக வேண்டும் என்பதே என் தீர்ப்பு'' என்றான். அதைக் கேட்ட தீரவர்மன் ''இது அநியாயம்'' எனவே சாந்தவர்மன் ''மதிபுர மக்கள் குணவர்மனே தம் ஊரில் இருந்து நிர்வாகத்தைத் தொடர்ந்து கவனிக்க வேண்டும் என்று வேண்டினார்கள். சத்தியபுரி மக்கள் தீரவர்மன் மன்னனாகி அங்கிருந்து போய்விட வேண்டும் என்று விரும்பினார்கள் இந்த மக்களின் கணிப்பைக் கொண்டுதான் நான் இப்படித் தீர்மானித்தேன். இது தான் என் இறுதியான முடிவு'' என்றான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''சாந்தவர்மன் எடுத்த முடிவு சரியானதா? அவன் தொடக்கத் திலிருந்தே குணவர்மனுக்குத் தான் பரிந்து பேசிக் கொண்டே வந்தான். மதிபுர மக்கள் அவன் மன்னனாகக் கூடாது என்றும் நகர நிர்வாகத்தை அவனே கவனித்து வர வேண்டும் என்றே விரும்பினார்கள். சத்தியபுரி மக்களோ தீரவர்மன் மன்னனாகி விட வேண்டும் என்று கருத்து தெரிவித்தார்களே. அப்படி இருக்க தீரவர்மனை மன்னனாக்காமல் குணவர்மனை மன்னனாக்க சாந்தவர்மன் முடிவு செய்தது எந்த வகையில் நியாயமானது? இதற்குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஒரு நாட்டில் நிர்வாக அதிகாரிகள் நல்லவர்களாக இருந்தால் மன்னன் மோசமானவ னானாலும் நாடு சுகமாக இருக்கும். நிர்வாக அதிகாரிகள் மோசமாக இருந்து மன்னன் எவ்வளவு தான் நல்லவனாக இருந்தாலும் நாடு சுகமாக இராது. மதிபுர மக்கள் நல்லாட்சி வேண்டும் என்று எண்ணியே அந்நகரவாசிகள் குணவர்மனே நிர்வாகப் பொறுப்பில் இருக்க வேண்டும் என்று விரும்பி னார்கள். சத்தியபுரி வாசிகளோ தீரவர்மன் நகரை விட்டுப் போக வேண்டும் என்றும் தம் நகருக்கு வேறு ஒரு நல்ல நிர்வாகி வர வேண்டும் என எண்ணியே அவன் மன்னனாகி விடுவதை ஆதரித் தார்கள்.

எனவே நல்லவனும் நிர்வாகத் திறனும் கொண்ட குணவர்மனே தீரவர்மனை விட மன்னனாகத் தகுதி பெற்றவன் என சாந்தவர்மன் தீர்மானித்தது முற்றிலும் சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறியது.






## கர்நாடகக் கடற்கரைகள்



கர்நாடக மாநிலம் 200மைல் நீளக் கடற் கரையைக் கொண்டுள்ளது. இதில் பாதிக்குமேல் வடக்குக் கர்நாடகத்தில் (வடக்குக் கனரா) உள்ளது. இங்கு 24 கடற்கரை இடங்கள் உள்ளன. இவை மிகவும் சுத்தமாக வைக்கப் பட்டுப் பராமரிக்கப் பட்டு வருகின்றன. இதன் பரந்த மணல்வெளி பலரையும் கவர்ந்து இழுக்கிறது. இவற்றில் ஒரு கடற்கரையை மட்டும காண மக்கள் கூட்டம் வருகிறது. ஏனெனில் இது ''ஓம்'' என்ற வடிவில் அமைந்துள்ளது. இதன் பெயரும் ஓம் கடற்கரை என்பதே.

## சரஸ்வதி நதியின் ஆரம்ப இடம்

நம் நாட்டில் நதிகளைக் குறிப்பிடுகையில் கங்கை, யமுனை, சரஸ்வதி என்று சொல்வது வழக்கம். இவற்றில் சரஸ்வதி நதி எங்கே இருந்தது என்பது சரியாகத் தெரியவில்லை. பிரயாகை என்னும் அலகாபாத்தில் இம்மூன்று நதிகளும் சேருவதாகக் கருதப் படுகிறது. இந்தியத் தொல் பொருள் ஆய்வுத் துறை ஹரியானா மாநிலத்தில் மறைந்து போன சரஸ்வதி நதியின் தடயங்களைத் தேடிக் கொண்டிருக்கிறது. ஆதிபத்திரி என்ற இடத்தில் கிடைத்த மண்பாண்டங்கள் கற்பலகைகள். தியான மண்டபம், வீட்டின் ஒரு பகுதி, புத்தர் சிலை ஆகியவற்றைக் கொண்டு இங்கு மக்கள் ஒரு நதிக் கரையில் வாழ்ந்தார்கள் என்று ஊகிக்கப் படுகிறது. அந்த நதி சரஸ்வதியாகத்தான் இருக்க வேண்டும் என்றும் ஆதிபத்திரி அதன் கரையில் அமைந்த ஊர் என்றும் கருதப் படுகிறது.



## இந்தியப் புராதனக் கதைகள் – 20

# நள்ளிரவில் நடந்தது!



மலைப் பகுதியில் பயணம் செய்த விஜன் என்பவன் வழியில் விபுல் என்பவனைச் சந்தித்தான். இருவரும் ஒரு ஊரில் பயணிகள் தங்கும் இல்லத்தை அடைந்தார்கள். அவர்கள் முதலில் அங்கு உணவை உண்டார்கள் விபுலோ உண்டபின் மதுவையும் நிறையக் குடித்து விட்டான்.

அங்கு இரு அறைகள் காலியாக இருப்பதாக அவர்கள் அறிந்தார்கள். ஒன்று முதலாவது மாடியில் இருக்க மற்றது இரண்டாவது மாடியில் இருந்தது. இல்லத்து நிர்வாகி அவர்களிடம் ''இரு அறைகளையும் பாருங்கள். தனித்தனி அறைகள் வேண்டும் என்றால் எடுத்துக் கொள்ளலாம். அல்லது இருவரும் ஒரே அறையில் இருப்பதானாலும் இருக்கலாம்.'' என்றான். விஜன் விபுலைக் கைத் தாங்கலாக அழைத்துக் கொண்டு படிகளில் ஏறி முதல் மாடியிலுள்ள அறைக்குள் போனான்.

அப்போது விபுல் விஜனிடம் ''இந்த அறை எனக்குப் பிடிக்கவில்லை. நீ போய் இரண்டாவது மாடியிலுள்ள அறையைப் பார்த்து விட்டுவா. அது இதை விட நன்றாக இருந்தால் நான் அங்கே போய் இருக்கிறேன்'' என்றான். விஜனும் இரண்டாவது மாடிக்குப் போய் அறையைப் பார்த்து விட்டு முதல் மாடி அறைக்குத் திரும்பி வந்தான்.

அவன் விபுலிடம் ''அந்த அறை இதை விட நன்றாகவும் காற்றோட்ட மாகவும் உள்ளது. நாம் இருவரும் அதில் தங்கலாம்'' என்றான்.

விபுலோ ''இல்லை. நான் தனியாகவே அறையில் இருக்க விரும்புகிறேன்.'' என்றான் அவனால் சரியாக நிற்கக் கூட முடியவில்லை. பேசும் போது நா குளறியது. மதுவை அதிகமாகக் குடித்ததால் ஏற்பட்ட விளைவு அது. விஜனும் தன் மனதிற்குள் ''நல்ல வேளை! இந்தக் குடிகாரனுடன் ஒரே அறையில் இருப்பதிலிருந்து தப்பினேனே'' என்று எண்ணி மகிழ்ந்து கொண் டான்.

அதன் பிறகு அவன் ''சரி வா. உன்னை அந்த அறையில் கொண்டு போய் விடுகிறேன்'' என்று கூறி அவனது பையை எடுத்துக் கொண்டு அவனது கையைப் பிடித்தான். அப்போது விபுல் உரக்க ''நான் என்ன குழந்தையா கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போக? அல்லது நான் நிறையக் குடித்து விட்டுத் தடு மாறுகிறேன் என்று நீ நினைக் கிறாயா? நானே அங்கே போகி றேன்.'' என்று கூவி விஜனின் கையி லிருந்த பையைப் பிடுங்கிக் கொண்டு போனான்.

விஜன் நன்கு தூங்கிவிட்டுக் காலையில் எழுந்தான். முகம் கழுவிக் குளித்து அவன் அங்கிருந்து புறப் பட்டுப் போகத் தயாரானான். அப்போது அவனுக்கு விபுலைப் பற்றிய நினைவு வந்தது. எனவே இரண்டாவது மாடிக்குப் போனான். அங்கு விபுல் அறைக்கு வெளியே சுருண்டு படுத்திருப்பதை அவன் கண்டான். தூங்கிக் கொண்டிருந்த



மலைகள் உயர்ந்தவை. அவற்றினும் உயர்ந்தது பூமி. பூமியிலும் உயர்ந்தது இந்த உலகம். ஆனால் யாவற்றிலும் உயர்ந்தவர்கள் பெரும் கஷ்டங்கள் வந்த போதிலும் அவற்றைச் சகித்துக் கொண்டு அமைதியாக இருக்கும் மகாத்மாக்களே.

-பாமினிவிலாசஹ.



அவனை விஜன் எழுப்பினான். விபுல் எழுந்து உட்கார்ந்து கண்களைக் கசக்கியவாறே சுற்றிலும் பார்த்தான். அவன் எதையோ பார்த்து பயந்திருக்கிறான் என்று விஜன் தெரிந்து கொண்டான்.

இதற்குள் விபுலே ''யார் வந்திருப்பது? விஜனா? அந்த முரடர்கள் என் பையை எடுத்துக் கொண்டு போய் விட்டார்களா?'' என்று கேட்டான். விஜனும் ''முரடர்களா? இல்லையே. உன் பை உன் அறையில் தானே இருக்கிறது'' என்றான். விபுலோ ''நேற்று நான் அறைக்குள் நுழைந்ததும் நான்கு முரடர்கள் நின்றிருப்பதைப் பார்த்தேன். நான் அவர்களைத் தாக்கினேன். அவர்கள் என்னை அடித்து தூக்கி இங்கே போட்டு விட்டார்கள். அப்போதே நான் நினைவை இழந்து விட்டேன்'' என்றான்.

விஜன் தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு ''நண்பா! இந்த அறையின் நான்கு சுவர்களிலும் பெரிய நிலைக் கண்ணாடிகள் உள்ளன. நீ உன் உருவத்தைத் தான் அவற்றில் பார்த்து நான்கு முரடர்கள் இருப்பதாக நினைத்து விட்டாய். நல்ல வேளை! நீ அந்த கண்ணாடிகளை உடைத்து உன்னையே காயப்படுத்திக் கொள்ள வில்லையே'' என்றான். விபுலும் ''நான் என்னோடா சண்டை போட்டேன்?'' என்று வெட்கப்பட்டுக் கேட்டான். விஜனும்'' ஆம். சிலசமயங்களில் நாம் நம்முடனேயே தெரிந்தோ தெரியாமலோ சண்டை போட்டுக் கொண்டும் விடுகிறோம்'' என்றான்.





# விசித்திர வினாக்கள்

மங்கம்மாவின் மீது அவளது பேத்தி லட்சுமியை வளர்க்கும் சுமை விழுந்தது. ஏனெனில் லட்சுமியின் பெற்றோர் ஒரு விபத்தில் இறந்து போனார்கள். மங்கம்மாவும் அவளை நன்கு படிக்க வைத்துப் பெரிய வளாக்கி விட்டாள். அதன் பிறகோ அவள் அப்பெண்ணின் திருமணம் பற்றிக் கவலைப் படலானாள். அப்போது அவளுக்குத் தன் மகன் சோமுவோடு படித்த அருணாசலத் தின் நினைவு வந்தது.

அருணாசலம் பட்டணத்திற்குப் போய் வியாபாரம் செய்து பெரும் பணக்காரனாகி விட்டான். அவனு க்கு இருமகன்கள் இருந் தார்கள். மூத்தவன் நன்கு படித்தவன். அழகானவன். இதை எண்ணிப் பார்த்து மங்கம்மா லட்சுமிக்கு ஏற்ற கணவன் அருணாசலத்தின் மூத்த மகன் தான் என்று தீர்மானித்தாள். அதனால் பட்டணத்திற்குப்போய் அருணாசலத்திடம் பேசிவர அவள் எண்ணினாள். ஆனால் பட்டணம் போய் வர அவளிடத்தில் பணம் இல்லை. அதனால் வட்டிக்கடை வரதனிடம் போய் விஷயத்தைச் சொல்லி கடனாக இருநூறு ரூபாய் கொடுக்கும்படிக் கேட்டாள்.

வரதனோ ''உன் பேத்தியை அருணாசலத்தின் மகனுக்கா திருமணம் செய்து வைக்க நினைக் கிறாய்? இந்த யோசனையை விட்டுவிடு. அருணாசலம் எவ்வளவு பெரிய பணக்காரன்! அவனா உன் பேத்தியைத் தன் மருமகளாக ஏற்றுக் கொள்வான்? நீ பட்டணம் போவது வீணே. நன்கு யோசித்துப் பார்'' என்று கூறி அனுப்பி விட்டான். மங்கம்மாவும் கவலையுடன் தன் வீட்டிற்குத் திரும்பிச் செல்ல லானாள்.

- சிவனார் செல்வன் -



வழியில் அவளை அவ்வூர் புரோகிதர் புருஷோத்தமன் கண்டு ''என்னம்மா! எங்கே போய் விட்டு வருகிறீர்கள்? ஏன் கவலையுடன் இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார். அவளும் லட்சுமியின் திருமணம் பற்றித் தான் பட்டணம் போய் அருணாசலத்திடம் பேச நினைத் ததையும் அது பற்றி வரதன் கூறிய தையும் சொன்னாள். அதைக் கேட்ட புருஷோத்தமன் ''நீங்கள் கவலைப் படாதீர்கள். நானும் சோமுவும் அருணாசலமும் ஒரே பள்ளியில் ஒன்றாகப் படித்தவர்கள். எனவே நான் பட்டணத்திற்குப் போய் அருணாசலத்தைக் கண்டு பேசி நல்ல முடிவுடன் வருகிறேன்'' என்று கூறி அவளைச் சமாதானப் படுத்தி அனுப்பினார்.

இதன் பிறகு புருஷோத்தமன் பட்டணத்திற்குப் போய் அருணா சலத்தைக் கண்டு பேசி விட்டு வந்தார். அவர் நேராக மங்கம்மாவின் வீட்டிற்குச் சென்றார். அவர் ஒரு வெள்ளிச் செம்பை அவளிடம் கொடுத்து ''இது பற்றிப் பிறகு சொல்கிறேன். முதலில் அருணாசலம் கேட்கச் சொன்ன இரு கேள்விகளை உன் பேத்தி லட்சுமியிடம் கேட்கச் சொல்லி இருக்கிறான் அவனுடைய கேள்விகளுக்குச் சரியானபதில்களை அவள் கூறிவிட்டால் அவளைத் தன் மருமகளாக ஏற்றுக் கொள்வதாகக் கூறினான். அவனது முதல் கேள்வி இது தான். கம்பர் ராமாயணத்தைத் தமிழில் எழுதினரல்லவா? அதற்கு அவர் வைத்த பெயர் என்ன? அடுத்த கேள்வி மனிதன் கடவுளிடம் தான் விரும்பும் போது மட்டுமே தனக்கு மரணம் ஏற்பட வேண்டும் என்ற வரத்தைக் கேட்டுப் பெற்றுக் கொண்டால் அவன் எப்போது இறப் பான்? இந்த இரண்டு கேள்வி களுக்கும் உன் பேத்தி சரியான பதில்களைச் சொல்கிறாளா என்று பார்ப்போம்'' என்றார்.

மங்கம்மாவும் ''இதென்ன விசித் திரமான கேள்வியாக உள்ளதே கம்பர் எழுதியது கம்பராமாயணம் தான். வால்மீகி படைத்த ராமாயணம் வால்மீகி ராமாயணம் என்பது போலத் தான் இதுவும். மரணம் வேண்டாம் என விரும்பி வரம் வாங்கியவன் சாக விரும்புவானா?''

எனவே அச்சமயத்தில் அங்கு கதவின் ஓரத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்த லட்சுமி ''சாதாரணமாக எல்லோருக்கும் கம்பர் தாம் எழுதிய ராமாயணத்திற்கு என்ன பெயர் வைத்தார் என்பது தெரியாது தான். அந்தப் பெயர் இராமாவதாரம் என்பது. எனக்குத் தமிழ் கற்பித்த பண்டிதர் இதை எனக்குச் சொல்லி இருக்கிறார். இரண்டாவது கேள்விக்கான விடையையும் கூறுகிறேன். மனிதன் தனக்கு மரணம் வர வேண்டும் என்றே தான் விரும்பும் போது மரணம் ஏற்பட வேண்டும் என்ற வரத்தைக் கடவுளிடமிருந்து பெற்றவனும் விரும்புவான். வில் வண்டியில் ஆரம்பப் பயணம் சுகமாகவே இருக்கும். ஆனால் தொடர்ந்து அதிலேயே பயணம் செய்தவாறே இருந்தால் அலுப்புத் தட்டி சிரமமாகத் தோன்றும். இது போலத் தான் வாழ்க்கையிலும் ஆரம்பத்தில் சுகமாக இருந்தாலும் போகப் போக அலுப்பு தட்டி விடும். அதனால் முடிவில் அவன் மரணத்தை அடையவே விரும்பு வான்'' என்றாள்.

அதைக் கேட்ட புருஷோத்தமன் ''பேஷ். இந்த விடைகளை எழுதி என்னிடம் கொடு. அடுத்து வெள்ளிச் செம்பு பற்றிய விஷயம். இது நிறைய நெய் இருக்கிறது. இந்த நெய்யை நாளை மாலைக்குள் வெண்ணையாக ஆக்கி விட வேண்டும்.'' உன்னால் இதைச் செய்ய முடியுமா?'' என்று லட்சுமியிடம் கேட்டார். அவளும்



''இது தானா? வெகு சுலபமாயிற்றே. நாளை மாலைக்குள் இந்த நெய்யை வெண்ணெயாக்கிக் காட்டுகிறேன்'' என்றாள்.

அவள் அன்றிரவு அந்த நெய்யில் கொஞ்சம் எடுத்து ரவா உருண்டை செய்தாள். மீத நெய்யை மறுநாள் காலையில் விற்று அந்தப் பணத்தில் வெண்ணெயை வாங்கி வெள்ளிச் செம்பில் நிரப்பினாள். மாலையில் புருஷோத்தமன் வந்து வெள்ளிச் செம்பு நிறைய வெண்ணெய் இருந்தது கண்டு ஆச்சரியப் பட்டார். லட்சுமியும் அந்த வெண்ணெய் எப்படி வந்தது என்பதை விவரமாகக் கூறி வெள்ளிச் செம்பை வெண்ணெ யோடு அவரிடம் கொடுத்தாள். அவரும் ''ஆகா! அருணாசலம் கேட்ட விசித்திரக் கேள்விகளுக்கு எல்லாம் நீ சரியான பதிலை அளித்து விட்டாய்.

இவ்வளவு புத்திசாலியான உன்னை அருணாசலம் கண்டிப்பாக தன் மருமகளாக்கிக் கொண்டு விடுவான். இதில் சந்தேகமே இல்லை'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினார்.

மறுநாள் புருஷோத்தமன் பட்டண த்திற்குப் போய் அருணா சலத்தைக் கண்டு அவன் கேட்ட கேள்விகளுக்கு லட்சுமி எழுதிக் கொடுத்த விடை களைக் கொடுத்ததோடு வெண்ணெ யுள்ள வெள்ளிச் செம்பையும் கொடுத் தார். விடைகளைப் படித்த அருணாசலம் மகிழ்ந்து போய் ''ஆகா! இந்த புத்திசாலிப் பெண் தான் என் மருமகளாக வேண்டும். புருஷோத்தமா! எனக்கு இப்படிப் பட்ட மருமகளை அளித்ததற்கு உனக்கு நான் மிகவும் கடன் பட்டிருக் கிறேன். இனி திருமணத்திற் கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். முதல் வேலையாக நான் போய் மங்கம்மாவைக் கண்டு முறைப்படி பெண் கேட்க வேண்டும்'' என்றான்.

அதன் பிறகு மளமளவென்று திருமண வேலைகள் நடந்தன. ஒரு நல்ல முகூர்த்தத்தில் அருணா சலத்தின் மகனுக்கும் லட்சுமிக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தது.



# செய்தி சுடர்



## மந்திரங்களின் பொருள் புரிகிறது!

**ஹோ**மங்கள் பூஜைகளைச் செய்யும் போது புரோகிதர்கள் மந்திரங்களைக் கூற, அவற்றைத் திருப்பிச் சொல்பவர்களுக்கு அவற்றின் பொருளும் தெரிவதில்லை. சரியாக உச்சரிக்கவும் முடிவதில்லை. அவற்றின் மகத்துவத்தையும் அறிவதில்லை. இது நேற்றைய நிலை எனலாம்.

இன்றோ இவற்றில் மாறுதலை ஏற்படுத்தி வருகிறது புனேவிலுள்ள ஞானபிரபோதினி என்ற அமைப்பு. இது புரோகிதர்களுக்குப் பயிற்சி அளித்து மந்திரங்களின் பொருளை மக்களுக்கு விளக்கிக்க கூறச் சொல்கிறது. இதற்காகப் பல புத்தகங்களை வெளியிட்டு அவற்றைக் கையில் வைத்துக் கொண்டு கூட்டமாய் கூடும் பூஜை வேளைகளில் உரக்க யாவரும் மந்திரங்களைக் கூற உதவி வருகிறது. திருமணம் நாமகாரணம், உபநயனம் போன்ற முகூர்த்தங்களிலும் திவசம், ஈமச்சடங்கு முதலியன செய்யும் போது கூறப்படும் மந்திரங்களும் அவற்றிற்கான விளக்கங்களும் இப்புத்தகங்களில் அளிக்கப் பட்டுள்ளன. இவை டாக்டர்களையும், என்ஜினியர்களையும் வழக்கறிஞர்களையும் மிகவும் கவர்ந்து வருகின்றன.

## நன்றிக் கடன்!

**ஜே**ம்ஸ் ஹாரிசன் என்பவருக்கு அவரது பதினைந்தாவது வயதில் உடலில் ரத்தம் செலுத்திப் புத்துயிர் அளிக்கப் பட்டது. இப்போது 51வது வயதில் உள்ள அவர் இது வரை 800 முறை ஆஸ்டிரேலிய செஞ்சிலுவை சங்கத்திற்கு ரத்ததானம் செய்துள்ளார். அவர் கொடுத்த ரத்தத்தின் மொத்த அளவு 480 லிட்டர். இது ஒரு உலக சாதனையாக 'கின்னஸ் புக்'கில் இடம் பெற்றுள்ளது.



*உத்தரப் பிரதேஷ் பல நேர்மாறுதல்களைக் கொண்டது. புவி இயலிலும் பண்பாட்டிலும் இவற்றைக் காணலாம். புராண காலத்திலிருந்தே இப்பகுதி புகழ் பெற்றது ராமர் பிறந்த அயோத்தியும் கிருஷ்ணர் பிறந்த மதுராபுரியும் இம்மாநிலத்தில் உள்ளன. புத்தருக்கும் மகாவீருக்கும் இம்மாநிலத்தோடு தொடர்பு இருந்தது. வரலாற்று முக்கியத்துவம் பெற்ற சம்பவங்கள் இங்கு நிகழ்ந்தன. மாபெரும் மன்னர்களான ஹர்ஷர், மொகலாய மன்னர்கள் இதை மையமாகக் கொண்டிருந்தார்கள்.*

*இந்தியாவில் இது நான்காவது பெரிய மாநிலம் இதன் பரப்பளவு 2,36,286 ச.கி.மீ. இதன் மக்கள் தொகை 166,052,829. இதன் கிழக்கே பீஹாரும், தெற்கே மத்திய பிரதேஷும், மேற்கே டில்லி, ராஜஸ்தான், ஹரியானா ஆகிய மாநிலங்களும் வடக்கே உத்தராஞ்சலும், நேபாளமும் உள்ளன.*

*கங்கை, யமுனை என்ற இரு புனித நதிகள் இதில் பாய்கின்றன. கோம்டி, ராம்கங்கா, காக்ரா முதலியன மற்ற பெரிய நதிகள். லக்னௌ இம்மாநிலத்தின் தலைநகர்.*

# அப்துல்லாவும் பிசாசுகளும்

**சு**ல்தான்புர் என்ற ஊரில் அப்துல்லா என்ற பனிரெண்டு வயதுச் சிறுவன் இருந்தான். சிரித்த முகத்துடன் சுருள் தலைமயிரைக் கொண்ட அவன் எல்லோர் மனதிலும் இடம் பெற்று விட்டான். அவன் ஊரிலுள்ளோருக்கு முகம் கோணாமல் உதவிகளைச் செய்து வந்தான். அதனால் ஏழையான அவனுக்கு அவன் செய்த வேலைகளுக்குச் சில்லறைக் காசுகளைக் கொடுத்



தார்கள். அவனும் அவற்றைச் சேர்த்து வைத்து கொண்டு வந்தான்.

தான் சேர்த்து வரும் பணத்தை என்ன செய்வது என்றே அவனுக்குத் தெரிய வில்லை. முதலில் தின்பண்டங்களை வாங்கிச் சாப்பிடலானான். ஆனால் வயிறு நிரம்பியதும் மீதப் பணத்தை என்ன செய்வது என்றே அவன் யோசிக்கலானான். அவனுக்கு பொம்மைகள் வாங்கி விளையாட வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதனால் அவன் பொம்மைகளாக வாங்கிக் கொண்டே இருந்தான். அவன் இருந்த இடத்தில் போர் வீரர்களின் பொம்மைகளும், யானை, குதிரை, ரதங்கள் போன்ற பல பொம்மைகளும் நிறைந்து இருந்தன. அவன் எப்போதும் பொம்மைகளை வைத்துக் கொண்டே விளையாடிக் கொண்டிரு ந்ததால் ஊர்க்காரர் களுக்கு அவன் வேலை செய்து கொண்டிருந்தது நின்று விட்டது.



அவன் சேர்த்து வைத்திருந்த பணம் எல்லாம் தீர்ந்து போயிற்று. அதனால் சாப்பிட எதுவும் வாங்க முடியாமல் பட்டினியாகவும் கிடக்க வேண்டிய நிலை வந்தது. அவன் பலரிடம் போய் வேலை செய்ய வந்திருப்பதாகக் கூறினான். அவர்களோ ''நீ இப்போதெல்லாம் வேலையில் கவனம் செலுத்தாமல் அதிக நேரம் பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டே இருக்கிறாய். நீ முன் போல இல்லை. அதனால் உன்னை நம்பி எந்த வேலையையும் கொடுக்க முடியாது. வேண்டுமானால் அவ்வப்போது சாப்பாடு போடுகிறோம்'' என்றார்கள். ஒருசிலர் அவன் பட்டினியாக இருக்கிறான் என்று அறிந்து சாப்பிட கொஞ்சம் கொடுத்து அனுப்பி விட்டார்கள். யாரும் பணம் கொடுக்கவில்லை. அவனுடையதாய் மாமன் உமர்கூட சாப்பாடு தான் போட முடியும் என்றும் பணம் கொடுக்க முடியாது என்றும் கூறி அனுப்பி விட்டான்.



# தாஜ்மஹல்



இம்மாநிலத்தின் ஆக்ராவில் கட்டப்பட்டதாஜ்மஹல் மிகமிக அழகான வரலாற்றுச் சிறப்புமிக்க கட்டடமாகக் கருதப் படுகிறது. சலவைக் கல்லால் கட்டப் பட்ட இந்தக் கட்டடம் தாஜ்மஹல் என்ற பெயரோடு உலக ஏழு அதிசயங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

முகலாய மன்னன் ஷாஜஹான் தன் மனைவி மும்தாஜின் நினைவாக இதைக் கட்டினான். இது மும்தாஜின் சமாதியாகும். ஷாஜஹான் 1666ல் இறந்ததும் அவனது உடலும் இங்கு அடக்கம் செய்யப்பட்டது. தாஜ்மஹல் யமுனை நதிக்கரையில் கட்டப்பட்டது. வெள்ளைச் சலவைக் கற்களால் இதனைக் கட்டி முடிக்க இருபத்திரண்டு ஆண்டுகள் பிடித்தன. இருபதாயிரம் பேர்களுக்கு மேலாக வேலை செய்து இதை 1648ல் கட்டி முடித்தார்கள். இதன் கலையழகு எல்லாவிதத்திலும் பொருந்தும்படி அமைக்கப் பட்டுள்ளது.

இக்கட்டடத்தில் உட்பகுதியில் பலமலர்கள் பல நிறக் கற்களால் அழகு படுத்தப் பட்டு அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். தலைவாசலில் குரானிலிருந்து வாக்கியங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு பொறிக்கப் பட்டுள்ளன. இவ்வாறு இக்கட்டடத்தில் அழகிற்கு மேல் அழகு என சேர்க்கப் பட்டுள்ளது.

அப்துல்லாவுக்கு என்ன செய்வ தென்றே தெரியவில்லை. சாப்பாடு தினமும் எப்படியோ அவனுக்குக் கிடைத்து வந்தது. ஆனால் அவன் விருப்பம் பொம்மை வாங்குவதில் இருந்ததால் அதை வாங்கக் காசு கிடைக்கவில்லையே என்று ஏங்க லானான்.

சுல்தான்புரில் சிலகுறும்புக்காரப் பையன்கள் இருந்தார்கள். அவர்கள் அப்துல்லாவை ஒரு சிக்கலில் மாட்டி விட்டு வேடிக்கை பார்க்க எண்ணி னார்கள்.

அவர்கள் அப்துல்லாவைக் கண்டு ''அப்துல்லா! உனக்கு நம்மூர் குளத்திலிருந்து சற்றுத் தள்ளி இருக்கும் பிசாசு மாளிகை தெரியும் அல்லவா? நீ அதற்குள் போய் ஓர் இரவு தங்கி விட்டுத் திரும்பி வந்தால் நாங்கள் உனக்கு நூறு ரூபாய் கொடுக்கிறோம். அங்கே போகும் போது உனக்கு உணவும் கட்டிக் கொடுக்கிறோம். இதற்கு உனக்கு சம்மதமா?'' என்று கேட்டார்கள். அப்துல்லாவும் ''அந்த பிசாசு மாளிகைக்கா? அதன் பக்கம் போகக் கூட எல்லோரும் பயப்படுவார்களே. என்னை அங்கேயா போகச்

சொல்கிறீர்கள்? பரவாயில்லை. நான் போய் விட்டு வருகிறேன். எனக்கு இப்போது பணம் வேண்டும். அதனால் நீங்கள் சொல்கிறபடி செய்ய நான் தயார்'' என்றான்.

அவன் கொஞ்சம் முன் பணம் கேட்டபோது அவர்கள் ''நீ அங்கே போய் ஒரு இரவு இருந்து விட்டு வா. பணத்தை உடனே கொடுக்கிறோம்'' என்று நூறு ரூபாய்கள் நிரம்பிய பையைக் காட்டினார்கள். அன்றிரவு சாப்பிட உணவையும் கட்டி அவனிடம் கொடுத்தார்கள். அதன் பின் அவனை அந்தப் பிசாசு மாளிகைக்குக் கொண்டு போய் விட்டுவிட்டு திரும்பி வந்தார்கள்.

அப்துல்லா சில பொம்மைகளையும் எடுத்துக் கொண்டு தான் பிசாசு மாளிகைக்குச் சென் றான். அவன் அம் மாளிகைக்குள் போனதும் தான் கொண்டு சென்ற பொம்மைகளை வைத்து விளையாடிக் கொண்டு இருந் தான். அப்போது நான்கு பிசாசுகள் அங்கு வந்தன. அவை மனிதர் களைச் சீண்டி வேடிக்கைப் பார்ப்ப வை. அவை அப்துல்லா வைச் சீண்டியும் மிரட்டியும் அங்கிருந்து விரட்ட முயன்றன.

அப்துல்லாவோ பிசாசு கள் இருப்பதைப் பற்றி கொஞ்சம் கூட கவலைப் படாமல் தன் பொம்மைகளுடன் விளையாடு வதிலேயே மூழ்கி இருந்தான். இதைக் கண்டு பிசாசுகள் ஆச்சரியப் பட்டன. அவனைச் சுற்றி வந்து குதித்து ஆடின. கத்தின. எதற்கும் அப்துல்லா அசைந்து கொடுக்க வில்லை.

அப்துல்லாவுக்குப் பசி எடுத்தது. அவன் உணவு மூட்டையைத் தேடினான். அது எங்கோ கிடந்தது. அதைத் தேடிக் கண்டு பிடித்து எடுத்து அவிழ்த்து அதிலிருந்த பணியாரத்தை எடுத்து ''ஏய் குண்டு! உன்னை அப்படியே விழுங்கப் போகிறேன்'' என்று உரக்கச் சொன்னான். அடுத்து அவனுக்கு ஒரு முட்டை கிடைத்தது.





## கைவினைப் பொருள்கள்

உத்திரப் பிரதேஷ் கை வினைப் பொருள்களுக்குப் பெயர் பெற்றது. மூங்கில் கூடைகள், தட்டுகள், நாற்காலிகள், மேஜைகள், தொங்கும் பாய்கள் போன்றவை அழகாகச் செய்யப் படுகின்றன. இதற்கான மூங்கில்கள் இம்மாநில ஆறுகளின் கரைகளில் வளர்கின்றன.

உலோக நகைகளுக்கும் மாநிலம் புகழ் பெற்றது. முராதாபாத் இதற்குப் பெயர் போனது. வண்ண வேலைப்பாடுடன் கூடிய நகைகள் பல தங்கம், வெள்ளி பித்தளை எனப் பல உலோகங்களில் செய்யப் படுகின்றன.

மரவேலை, கல்சிற்பங்கள், மெழுகாலான பொருள்கள், வளையல்கள், பொம்மைகள், வேலைப்பாடுடன் கூடிய தந்தப் பொருள்கள் ஆகியவற்றிற்கு இம்மாநிலம் பெயர் பெற்றது.

உடனே அவன் ''ஏய் மொட்டைத் தலையா! உன்னை விட்டு விடுவேனா? மாட்டேன்'' என்று கூவினான். இதன் பின் ஒரு ரொட்டித் துண்டு கிடைக்கவே ''ஏய் கம்பிளித் தோலா! நீயும் என்னிடமிருந்து தப்ப முடியாது'' என்று கத்தினான்.

அவன் கூறியதைப் பிசாசுகள் கேட்டன. அப்பிசாசுகளில் ஒன்று குண்டு, மற்றது மொட்டை, மூன்றாவது கரடி போல ரோமம் கொண்டது. அவை தம்மை அப்துல்லா விழுங்கி விடுவான் என்று எண்ணிப் பயந்தன. ''இவன் முன் தங்கக் கட்டிகளைக் கொட்டித் திகைக்கவைத்து விட்டு நாம் தப்பி ஓடி விடலாம்'' என்று அவை பேசி முடிவுக்கு வந்தன. அவை உடனே தங்கக் கட்டிகளை எடுத்து வந்து அவன் முன்போட்டு ''இவை உனக்குத் தான். எங்களை ஒன்றும் செய்யாதே நாங்கள் போய் விடுகிறோம்'' என்று கூறிவிட்டு அவை அப்போதே மறைந்து போயின.

அப்துல்லா தன்முன் தங்கக் கட்டிகள் விழுந்தது கண்டு திகைத்துப் போனான். அதனால் பிசாசுகள் கூறியது எதுவும் அவன் காதில் விழவில்லை. தனக்கு திடீரென அதிர்ஷ்டம் அடித்தது கண்டு மகிழ்ந்து போனான். பிசாசுமாளி கையிலுள்ள பிசாசுகள் நல்லவையே என்றும் அவை தன் ஏழ்மையைக் கண்டு இரக்கப்பட்டு தங்கக் கட்டிகளைத் தனக்குக் கொடுத்து விட்டுப் போனதாக எண்ணி அவன் மகிழ்ந்தான். விடியும் வரை அவன் காத்திருந்தான். சூரியோதயம் ஆனதும் தங்கக்

கட்டிகளை மூட்டை யாகக் கட்டி எடுத்துக் கொண்டு பிசாசு மாளிகை யிலிருந்து அவன் வெளியே வந்தான்.

அவன் தான் எடுத்து வந்த தங்கக் கட்டிகளைத் தன் வீட்டில் மறைத்து வைத்தான்.

பிறகு தன்னைப் பிசாசு மாளிகைக்கு அனுப்பிய அந்த இளைஞர்களை அவன் பார்த்தான். அவனைக் கண்ட அவர்கள் ஆச்சரியப் பட்டு ''அப்துல்லா! நீ உயிருடனா இருக்கிறாய்? இறந்து விடவில்லை. உன்னை நாங்கள் பிசாசு மாளிகைக் குள் கொண்டுபோய் விட்டு வந்தோமே. பிசாசுகள் வந்து உன்னை ஒன்றும் செய்ய வில்லையா? நீ பிசாசுகளைப் பார்த்து பயப்பட வில்லையா? என்ன தான் நடந்தது? விவரமாகச் சொல்'' என்று கேள்விகளாக கேட்டுத் துளைத் தார்கள்.

அப்துல்லாவும் சிரித்தவாறே'' என்ன ஆச்சரியமாக இருக்கிறதா? அந்தப் பிசாசுகள் நல்லவை. என்னை ஒன்றும் செய்ய வில்லை. என்னோடு பேசக் கூடவில்லை. ஆனால் எனக்கு ஏராளமாய்ப் பரிசுகளைக் கொட்டிக் குவித்து விட்டு மாயமாய் மறைந்து விட்டன. சரி பந்தயப் பணத்தைக் கொடுங்கள் என்று கேட்டான். அவர்களும் ''அப்துல்லா! நீ பிசாசு மாளிகையிலிருந்து திரும்பி வரமாட்டாய் என்று நினைத்தோம். நாங்கள் பேசியபடி பந்தயப் பணத்தைக் கொடுக்கிறோம்'' என்று கூறிப் பணத்தைக் கொடுத்தார்கள்.

அப்துல்லாவும் அதை வாங்கிக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

அப்போதே அவன் பொம் மைகளோடு விளையாடுவதை விட்டு விட்டு பொறுப்புள்ளவனாக மாறி விட்டான்.

ஊரில் நற்செயல்களைப் புரிந்து எல்லோருடைய பாராட்டுதல் களையும் அவன் பெற்று உயர் பதவிகளை அடைந்து கௌரவமாக வாழ்ந்து வரலானான்.





# ஆசையே அழிவு

மலையூரிலுள்ளவர்கள் ஏதாவது ஒரு வேலையின் பொருட்டு பட்டணத்திற்குப் போக வேண்டு மானால் அடர்ந்த காட்டின் வழி யாகத்தான் செல்ல வேண்டும். ஒரு நாள் நாகசாமி மலையூரிலிருந்து பட்டணத்திற்குப் புறப்பட்டு போய்த் தன் வேலையை அங்கு முடித்து விட்டுத் திரும்பி வந்தபோது நன்கு இருட்டிவிட்டது.

காட்டு வழியேதான் அவன் வந்து கொண்டிருந்தான். அப்போது மழை பெய்ய ஆரம்பித்தது. மழை வலுக்கவே அவன் சற்று ஒதுங்க ஏதாவது இடம் உள்ளதா என்று பார்த்தான். சற்று தூரத்தில் ஒரு கோவில் தென்படவே அங்கு சென்றான். ஆனால் அதை அடையும் போது அங்கு பாம்புகள் ஊர்வதைக் கண்டு அருகிலிருந்த ஒரு ஆல மரத் தின் மீது அவன் ஏறி உட்கார்ந்தான்.

சற்று நேரத்திற்குப் பின் அந்த மரத்தின் கீழ் பலத்த சத்தம் ஏற்படவே நாகசாமி என்ன என்று பார்த்தான். மரத்தின் கீழ் நான்கு பிசாசுகள் உட்கார்ந்திருந்தன. அவற் றில் ஒன்று தலைமைப் பிசாசு போலும். அது மற்ற பிசாசுகளைப் பார்த்து ''நீங்கள் கொண்டு வந்துள்ள விலை மதிப்பு மிக்க பொருள்களைக் காட்டுங்கள்'' என்றது. மூன்று பிசாசுகளும் தாம் கொண்டு வந்த பைகளைத் திறந்து காட்டின. தலைமைப் பிசாசு மூன்று பை களுள்ளும் பார்த்து விட்டுத் திருப்தி அடைந்து ''பேஷ்!'' நான் சொன்னப் படியே இந்த அரிய விலை மதிப்பு மிக்கப் பொருள்களைக் கொண்டு வந்திருக்கிறீர்கள். இவற்றை இப் போதைக்கு இந்த மரத்தின் பொந்தில் வைத்து விட்டு நாளை இரவு வந்து இது பற்றி யோசிக் கலாம்'' என்றது.

– வி.லாவண்யா –

மூன்று பிசாசுகளும் தம் தலைவன் கூறியது போலவே பைகளை அந்த மரத்தின் பொந்தில் வைத்தன. அதன் பின் அந்த நான்கு பிசாசுகளும் அங்கிருந்து போய் விட்டன. விடியும் வரை மரத்தின் மேலேயே இருந்த நாகசாமி வெளிச்சம் வந்ததும் கீழே இறங்கி ''இவை பிசாசுகளின் பொருள்கள்! இவற்றை நான் எடுத்து செல்லக்கூடாது. எடுத்துப் போனால் ஏதாவது கெடுதல் விளையும்.'' என எண்ணி அங்கிருந்து கிளம்பித் தன் வீட்டை அடைந்தான்.

அங்கு அவன் தன் மனைவியிடம் தான் பிசாசுகளைப் பார்த்ததைச் சொல்லி'' பிசாசுகள் காட்டுக் கோவிலின் பக்கத்திலுள்ள ஆல மரத்தின் பொந்தில் பைகளை வைத் திருக்கின்றன. அவை பிசாசுகளுக்கு சொந்தமானதால் அவற்றை எடுத்து வந்தால் நமக்குத்தான் பிரச்சினை என்றே கொண்டு வரவில்லை'' என்றான். அப்போது கடுகு கடன் கேட்க வந்த அடுத்த வீட்டு கனகம் நாகசாமி கூறியதை மறைந்திருந்து கேட்டாள். உடனே அவள் தன் வீட்டிற்கு ஓடிப்போய்த் தன் கணவன் சிவசாமியிடம் ''காட்டில் சிவன் கோவில் பக்கத்திலுள்ள ஆல மரத்தின் பொந்தில் பிசாசுகள் மூன்று பைகளில் விலை உயர்ந்த பொருள் களை வைத்துள்ளன. நீ இப்போது போய் அந்தப் பைகளை எடுத்து வா. நாம் பெரும் பணக்காரர்களாகி விடலாம் என்றாள்.



சிவசாமியும் காட்டிற்குப்போய் ஆலமரத்திலிருந்த மூன்று பை களையும் எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தான். கனகம் அவற்றை வாங்கி ஆவலுடன் திறந்து பார்த் தாள். ஒன்றில் மண்டை ஓடும் மற்றதில் எலும்புகளும் மூன்றா வதில் சாம்பலும் இருந்தன. அதைக் கண்ட சிவசாமி ''பூ! இவைதானா பிசாசுகளுக்கு விலையுயர்ந்த பொருள்கள்!!'' என்று கூவினான்.

கனகம் சற்று யோசித்து விட்டு ''நமக்கு இவை துச்சமாக இருந் தாலும் பிசாசுகளுக்கு இவை விலையுயர்ந்தவையாக இருக்கலாம். அதனால் நீ இப்பைகளை எடுத்துக் கொண்டு போய் இன்றிரவு அந்த ஆலமரத்தின் மீது இரு. பிசாசுகள்



வந்து தாம் வைத்த பைகளைத் தேடும். அப்போது பேரம் பேசி இந்தப் பைகளை அவற்றிடம் கொடுத்து விட்டு நிறையப் பணம் வாங்கி வா'' என்று கூறி அனுப் பினாள். சிவசாமியும் தன் மனைவி சொல்வதைத் தட்ட முடியாமல் காட்டிற்குப் போய் பைகளோடு ஆலமரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

நள்ளிரவில் நான்கு பிசாசுகளும் ஆலமரத்தடியே வந்து நின்றன. அவற்றில் ஒரு பிசாசின்கையில் ஒரு பை இருந்தது. தலைமைப் பிசாசு ஆலமரத்துப் பொந்தில் கை விட்டுப் பார்த்தது. அங்கு பைகள் இல்லாத தைக் கண்டு ''ஆ! நாம் எவ்வளவு சிரமப்பட்டு அந்த மந்திரவாதியை எரித்து அவனது மண்டை ஓட்டையும் எலும்பு களையும் சாம்பலையும் சேகரித் தோம். அவை இப்போது இங்கே இல்லையே, நமக்கு விலை மதிப்பான அப் பொருள்களை யார் எடுத்துப் போயிருப்பார்கள்?'' என்று கத்தியது.

அப்போது சிவசாமி மரத் திலிருந்து கீழே குதித்து அப்பிசாசு களிடம் ''உங்கள் விலையுயர்ந்த பொருள்கள் என்னிடம் உள்ளன. எனக்கு லட்சம் தங்க நாணயங்கள் கொடுத்தால் இம்மூன்று பை களையும் கொடுக்கிறேன்'' என்றான். தலைமைப் பிசாசும் ''இப்போது எங்களிடம் அவ்வளவு தங்க நாணயங்கள் இல்லை. ஆனால் பல லட்சங்கள் மதிப்புள்ள தங்க நகைகளும் வைர நகைகளும் உள்ளன. இவற்றை வாங்கிக் கொண்டு எம்பொருள்களைக் கொடுத்துவிடு'' என்றது. சிவசாமி யும் ''தங்க, வைர நகைகளா? என் மனைவிக்கு மிகவும் பிடிக்குமே'' என்று கூறி பிசாசு கொடுத்த பையை வாங்கிப் பார்த்துத் திருப்தி அடைந்து பிசாசுகளிடம் தான் எடுத்த மூன்று பைகளையும் கொடுத்து விட்டுத் தன் ஊரை நோக்கிச் சென்றான்.

ஆனால் அவன் ஊர் எல்லையில் கால் வைத்ததும் காவல் வீரர்கள் அவனைப் பிடித்து அவன் வைத் திருந்த பையைச் சோதனை போட்டார்கள் அப்பையில் தங்க

வைர நகைகள் இருப்பது கண்டு ''இவற்றை எங்கே திருடினாய்?'' என்று கேட்கவே அவன் பிசாசுகள் கொடுத்தன என்று கூறினான். அதனை அவர்கள் நம்பாமல் அவனைக் காவல் நிலயத்திற்கு இழுத்துச் சென்றார்கள். அங்கு விசாரணை நடந்தது. சிவசாமி கூறியதை யாரும் நம்பவில்லை.

இதற்குள் கனகம் ஓடோடி வந்து காவல் அதிகாரியைக் கண்டு ''ஐயா! என் கணவனைவிட்டு விடுங்கள். நான் தான் அவரைக் காட்டிற்கு அனுப்பினேன்.

காட்டில் சிவன் கோவிலுக்கு அருகே உள்ள ஒரு ஆலமரத்தில் சில பிசாசுகள் விலை உயர்ந்த நகைகளை மறைத்து வைத்திருக்கின்றன என் பதை என் அடுத்த வீட்டில் வசிக்கும் நாகசாமி தன் மனைவியிடம் கூறிக் கொண்டி ருந்ததை நான் ஒட்டுக் கேட்டேன்.

அப்பைகளில் விலை உயர்ந்த பொருள்கள் இருக்கும் என்று எண்ணி அவற்றை அடைய ஆசைப் பட்டேன். அதனால் என் கணவரை அங்கு அனுப்பி நகைகளை எடுத்து வரச் சொன்னேன். இவை பிசாசு களின் நகைகளே. இவர் இதைத் திருடவில்லை. என் பேராசையால் இப்படி நடந்து விட்டது'' என்று கூறிக் கெஞ்சி கதறினாள்.

காவலதிகாரியும் ''இதென்ன கதையாக இருக்கிறது? காட்டிற்கு இவன் போனானாம். பிசாசுகள் நகை களைத் தூக்கி இவனிடம் கொடுத்து விட்டதாம் எல்லாம் கட்டுக்கதை. இதை நான் நம்ப மாட்டேன். நான் இந்த நகைகளைப் பறி முதல் செய்து அரசாங்க பொக்கிஷத்தில் சேர்க்கி றேன். சிவசாமி இவற்றைத் திருடியே இருக்க வேண்டும். எனவே அதற்காக ஆயிரம் வராகன் அபராதம் செலுத்த வேண்டும்'' என்று கட்டளை இட்டார்.

கனகம் அபராதத்தைச் செலுத்தித் தன் கணவனை விடுத்துக் கொண்டு சென்றாள். வழியில் அவள் ''அதிக ஆசை அழிவையே தரும்'' எனப் புலம்பிக் கொண்டே சென்றாள்.



# நம் இந்தியா



1. இந்தப் படத்தில் உள்ளவர் யார்? இவருக்கு 1997ல் பொது ஜன சேவைக்காக ஒரு விருது வழங்கப்பட்டது. அதன் பெயர் என்ன?

2. ஒரிஸ்ஸாவில் ஒரு நகரின் பெயருக்குப் பொருள் மக்கள் கோட்டை. இந்தச் சொல் முண்டா இனத்தவர் பேசும் மொழியில் உள்ளது. அந்த ஊரின் பெயர் என்ன?

3. துவார சமுத்திரத்தைத் தலை நகராகக் கொண்டு ஆண்ட வம்சத்தவர் யாவர்?

4. மாவிலைத் தோரணம் வீட்டு வாசலில் கட்டுவது ஹிந்துக்கள் மரபு. எந்தக் கடவுளுக்கு இந்த வழிபாடு? அவருக்குப் பிடித்தமானது மாம்பழம் என்றால் பெயர் தெரியுமே.

5. பஞ்சாபின் ஒரு கோட்டை யிலிருந்து பந்தாபகதூர் ஒரு சீக்கியக் குடியரசைப் பிரகடனப் படுத்தினார் அது எந்தக் கோட்டை?

6. பௌத்த சன்னியாசினிகளை எப்பெயரில் குறிப்பிடுகிறார்கள்?

7. இந்தியாவிலிருந்து செல்லும் ஒரு உலர்ந்த வாசனைப் பொருள் ஈரானில் (முந்நாளில் பாரசீகம்) 'சிறு நகங்கள்' எனப்படுகிறது. அந்த வாசனைப் பொருள் எது?

8. நான்கு திராவிட மொழிகள் வருவதற்குமுன் சமஸ்கிருதத்தை எழுத எந்த எழுத்து பயன் பட்டது?

9. 'அர்ஜுனா' விருதைப் பெற்ற முதலாவது விளையாட்டு வீரர் யார்?

10. உப்பு சட்டத்தை எதிர்த்து காந்திஜீ தண்டியாத்திரை மேற்கொண்ட போது அது போன்ற யாத்திரை திருச்சியிலிருந்து வேதாரண் யத்திற்கு மேற் கொள்ளப் பட்டது. அதற்குத் தலைமை தாங்கியவர் யார்?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## நவம்பர் மாத வினாக்களின் விடைகள்

1. *1950-51*
2. *பிராம்மி*
3. *காந்திஜீ*
4. *ரவிதாஸ்*
5. *அந்தமான், நிகோபார் தீவுகள்*
6. *பாலகங்காதர திலக்*
7. *ஐந்து முறைகள்*
8. *மஹாராஷ்ட்ரா.*



# விநாயகர்

பிரசன்னவதனாவும் மோகனாவும் வரிசையாக வைக்கப்பட்டிருந்த சிலைகளைப் பார்த்து அதிருப்தியைக் காட்டியவாறே சென்றனர். அப்போது சற்று தூரத்தில் சிறுவர்கள் கைதட்டி ஆர்ப்பரித்தது அவர்கள் கவனத்தை ஈர்த்தது.

யாரோ ஒருவர் ''அங்கேயும் ஒரு விசித்திரமான சிலை இருக்கிறது,'' என்றார்.

அதைக் கேட்ட மோகனா ''போய்ப் பார்க்கலாம் அக்கா. ஒரு வேளை நாம் விரும்புவது அதுவாகவே இருந்தாலும் இருக்கலாம்'' என்றாள். பிரசன்னவதனாவும் அவளோடு சேர்ந்து கிளம்பவே அங்கு கூடி இருந்த யாவரும் அவர்களின் பின்னாலேயே சென்றனர்.

பிரசன்னவதனா அந்தச் சிலையைக் கண்டு பணப்பையை அந்த விக்கிரகத்தின் முன் வைத்தாள். தன் கழுத்திலிருந்த நவரத்தின மாலையை எடுத்து சிலைமுன் தலை குனிந்து உட்கார்ந்திருந்த விசித்திரனின் கையில் அணி வித்தாள். அது கண்டு மற்றவர்கள் ''இதென்ன பைத்தியக்காரச் செயல்! நல்ல நல்ல சிலைகளை எல்லாம் ஒதுக்கி விட்டு இங்கே வந்திருக் கிறார்களே'' என்று பேசிக் கொள்ளலானார்கள்.

அதைக் கேட்ட பிரசன்னவதனா ''இந்த விக்கிரகத்தை இந்தச் சிறுவர்கள் கண்டு ஏன் களித்தார்களோ அதே காரணத்தால் தான் நாங்களும் இங்கு வந்து மகிழ்ச்சி அடைந்தோம்'' எனறாள். இதே சமயம் விசித்திரனின் பெற்றோர்கள்



தம் காணாமல் போன மகனை அங்கு சந்தித்து ஆனந்தப்படுவதைக் கண்ட பிரசன்ன வதனா மகிழ்ச்சியோடு ''எம் கோரிக்கை நிறைவேறி விட்டது. நாங்கள் எங்கள் பிரார்த் தனைப்படி காணிக்கை செலுத்து கிறோம்'' என்றாள்.

மறு நிமிடம் மக்கள் அங்கு ஒரு பெரிய பந்தலைப் போட்டார்கள். மேடையை அமைத்தார்கள். பிசன்ன வதனா அந்த விநாயக விக்கிரகத்தை மேடை மீதமர்த்தி அதனருகே அமர்ந்து பக்தி பாடல் களைப் பாடலானாள். மோகனா அதற்கேற்ப மின்னல் போல வளைந்து வளைந்து நடனமாடினாள்.

இந்த இனிய கானம் கஜானன பண்டிதரின் காதில் விழுந்தது. அதுவரை வயோதிகத்தின் காரணத் தால் எழுந்து நடமாடக் கூட முடியாமல் படுத்திருந்த அவர் புதிய சக்தி பெற்றவராய் எழுந்து ஓடி வந்து பந்தலில் அமைக்கப் பட்ட விநாயக விக்கிரகத்தையும் அதனருகே அமர்ந் திருந்த பிரசன்னவதனாவையும் கண்டு பரவசப்பட்டவராய் இரு கைகளையும் கூப்பி மெய்மறந்து நின்றார்.

நிமிடத்திற்கு நிமிடம் அந்த விநாயக விக்கிரகம் பெரிதாக லாயிற்று. நடனமாடிக்கொண்டிருந்த மோகனா அதனைத் தூக்கித் தன் தோளின் மீது வைத்துக் கொண்டு நடனத்தைத் தொடர்ந்தாள். அது கண்டு யாவரும் ''அடேயப்பா! இவ்வளவு கனமான விக்கிரகத்தை தூக்கி வைத்துக் கொண்டு எப்படித் தான் நடனமாடுகிறாள்!'' என்று வியந்தார்கள்.

கண்மூடி மெய்மறந்து உட்கார் திருந்த கஜானன பண்டிதர் கண் களைத் திறந்து பார்த்தார். விநாயக விக்கிரகம் இருந்த இடத்தில் பளபளக்கும் பணப்பை இருப்பதைக் கண்டார். விசித்திரனோ கண்ணை மூடியவாறே அமர்ந்திருப்பதை அவர் கண்டார்.

கஜானன பண்டிதர் விசித்திர னிடம் ''அப்பனே! இந்த ஆலய மண்டபத்தில் விநாயகரின் திரு விளையாடல்களைச் சித்தரிக்கும் ஓவியங்களைத் தீட்டி சிலைகளை அமை. அதற்கான பணத்தை உனக்கு விநாயகர் பிரசன்னவதனாவைக் கொண்டு இதோ அளித்திருக்கிறார்.

பார்'' என்றார். எல்லோரும் கை தட்டி ஆர்ப்பரித்து கஜானன பண்டிதரையும் விசித்திரனையும் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர்.

மோகனா விநாயக விக்கிரகத் தோடு கோவில் குளத்தில் இறங்கி மாயமானாள். அவளுக்கு பதிலாக விநாயக விக்கிரகத்தை மூஞ்சூறு சுமந்து கொண்டு குளத்து நீரினுள் செல்வதைக் கண்டார்கள். அந்த விநாயக விக்கிரகம் குளத்தில் சற்று தூரம் போய் பளிச்சென ஒளி விட்டுப் பிரகாசித்து தன் கையை உயர்த்தி கரையிலிருந்து மக்களை ஆசீர்வதித்து விட்டு மறைந்தது.

கஜானன பண்டிதர் விசித்திரனைக் கட்டித் தழுவிக் கொண்டு ''பாவனா! உன்னால் இந்த வாதாபி நகருக்குப் புனிதத் தன்மை மேலும் சேர்ந்து விட்டது இதனால் உன் பெயர் பாவனமிசிரன் என்று விளங்கட்டும்'' என்றார்.

இதனை பாவனமிசிரர் கூறியதும் இளைஞனான சிற்பி அவரது கால்களில் விழுந்து ''குருவே! உங்கள் புண்ணிய சரிதத்தைக் கேட்டு புனிதம் அடைந்தேன். என் பெயர் ஆனந்தன். நான் தங்களது சீடன். இந்த மண்டபத் தில் தங்களது அடிச் சுவடுகளைப் பின் பற்றி மேலும் பல ஓவியங் களைச் சேர்க்கிறேன்'' என்றான். வயதான பாவனமிசிரரும் அவனைத் தடவி ஆசீர்வதித்தவாறே மேலும் கூறலானார்.

''வியாசர் தாம் சொல்ல விரும்பிய மகாபாரதத்தை தன் மன வேகத்திற்கு





ஏற்ப எழுதும் சக்தி பெற்றவர் யாராவது இருக்கிறாரா என யோசிக்கையில் பிரம்மா அவர் முன் தோன்றி விநாயகரை அந்த வேலை யில் அமர்த்திக் கொள்ளு மாறு கூறி மறைந்தார். பிரம்மாவின் கட்டளைப் படி வியாசர் விநாயகப் பெரு மானைப் பிரார்த்திக்கலானார்.

விநாயகரும் அவர் முன் தோன்றி ''வியாசரே! நான் உமக்கு உதவு கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. நீங்கள் நிறுத்தாமல் மகாபாரதத்தைச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். நான் எழுதிக் கொடுக் கிறேன்.'' எனக் கூறித் தம் தந்தத்தை ஒடித்து எழுத்தாணியாக எடுத்துக் கொண்டார்.

வியாசரும் கண்களை மூடிக் கொண்டு அமர்ந்து தியானம் செய்து விட்டு மகாபாரதக் கதையைக் கூற, விநாயகர் எழுதலானர்.

பிறவிக் குருடரான திருதராஷ் டிரன் சிம்மாசனத்தை அடைய அவன் தம்பி பாண்டு ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்தான். பாண்டு வுக்குப் பாண்டவர் ஐவரும் திருதராஷ்டிரனுக்குக் கௌரவர்கள் நூறு பேரும் பிறந்தனர். சிறு வயது முதல் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையே வெறுப்பு ஏற் பட்டது.

மயன் அமைத்த மாளிகையில் துரியோதனன் அடைந்த அவமானத் தால் அவன் பாண்டவர்களின் மனைவி துரௌபதியை சூதாட்டத் தில் வென்று அவமானப் படுத்த முயன்றான். அப்போது பீமன் துரௌபதியை அவமானப் படுத்த முயன்ற அவனை தொடையைப் பிளந்து கொல்வதாயும் துரியோத னனுக்கு உதவிய துச்சாதனனைக் கொன்று ரத்தத்தைக் குடிப்பதாயும் சபதம் செய்தான்.

பாண்டவர்கள் வனவாசம் மேற் கொண்டு ஒரு வருட அஞ்ஞாத வாசத்தை விராட மன்னனின் தர்பாரில் கழித்தார்கள். அப்போது சைரந்திரியாக இருந்த துரௌ பதியைக் கீசகன் அவமானப்படுத்த முயலவே பீமன் அவனைக் கொன்றான். பிரகன்னளை என்ற பெயரில் இருந்த அர்ஜுனன் மாடுகளைப் பிடிக்க வந்த கௌரவர்களை விரட்டினான்.

அபிமன்யுவிற்கும் உத்தரைக்கும் கல்யாணம் நடந்தது. கிருஷ்ணர்

பாண்டவர்களின் சார்பில் தூதுபோய் துரியோதனனிடம், அவர்களுக்கு ஐந்து வீடுகளையாவது கொடுக்கும் படிக் கேட்டார். அவனோ ஊசி முனையளவு இடம் கூட கொடுக்க முடியாது எனக்கூறி விட்டான். இதனால் மகாபாரதப் போர் மூண்டது.

கிருஷ்ணர் அர்ஜுனனின் தேரோட்டியாக இருந்து உதவினார். அவனுக்கு கீதையை உபதேசித்தார். போரில் பீஷ்மர் அம்புப் படுக் கையில் படுத்தார். துரோணர் பத்ம வியூகம் அமைத்து அபிமன்யுவை அதில் வரச் செய்தார். பத்து மாபெரும் வீரர்கள் சேர்ந்து தான் அபிமன்யூவைக் கொல்ல முடிந்தது. சுபத்திரை கண்ணீர் வடித்தாள்.

அர்ஜுனன் வீறுகொண்டு எழுந்து போர் புரிந்தான். திருஷ்டத்யும்னன் துரோணரின் தலையை வெட்டினான். துரியோதனன் போரில் கர்ணனையே பெரிதும் நம்பி இருந்தான். ஆனால் போரில் கர்ணனும் இறந்ததால் அவன் மனம் ஒடிந்து போனான். பீமன் தன் சபதப் படி துரியோதனனின் தொடையைப் பிளந்து அவனைக் கொன்றான். மகாபாரதப் போர் முடிந்தது. பாண்டவர்கள் வெற்றி பெற்றனர்.

கிருஷ்ணரும் தம் அவதாரத்தை முடித்துக் கொண்டார். தருமரும் நாட்டைப் பரீட்சித்துவிடம் கொடுத்து விட்டுத் தன் தம்பி



களுடனும் துரௌபதியுடனும் இமய மலைக்குத்தவம் செய்ய கிளம்பி விட்டார். தருமர் இமய மலையின் உச்சியில் போய் நின்று நற்கதி பெற்றார்.

இந்த மகாபாரதக் கதையை வியாசர் சொல்லச் சொல்ல விநாயகர் எழுதினாரா அல்லது விநாயகர் ஒவ்வொரு வரியையும் எழுதியபின் வியாசர் கூறினாரா என்பது சந்தேகமாக இருந்தது.

வியாசர் மனதில் தோன்றியதை கூறு முன் விநாயகர் எழுதி முடித்ததே இப்படி நினைக்கக் காரணம். பல நேரங்களில் வியாசரே இப்படி எண்ணித் திகைத்துப் போயிருக் கிறார், இந்த விதமாக மகாபாரதம் இயற்றப்பட்டு எழுதப் பட்டது.

சத்திய லோகத்தில் பிரம்ம மகா பாரதம் எழுதும் பணி முடிவுறுவது

கண்டு புன்னகை பூத்தார். சரஸ்வதி தேவியும் வீணை மீட்டி அப்பணி முடியப் போவது கண்டு மகிழ்ச்சி அடைந்தாள்.

வியாசர் பாரதத்தின் கடைசிப் பர்வத்தைச் சொல்லும் போது சற்றுத் தயங்கி விநாயகரைப் பார்த்தார். மறு நிமிடமே விநாயகர் அங்கிருந்து மறைந்து விட்டார். அவர் எழுதி வைத்து விட்டு போன மகாபாரத ஏட்டுச் சுவடிகளின் மீது வானத் திலிருந்து மலர் மாரி பொழிந்தது.

வியாசர் பயபக்தியுடன் அந்தச் சுவடியை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டார். தாம் இன்னும் சொல்ல விரும்பியதை எழுத முடிய வில்லையே என்று ஏங்கி அவர் அந்த ஓலைச் சுவடிகளை பிரித்துப் பார்த்தார். என்ன ஆச்சரியம்! அவர் சொல்ல விரும்பியது எல்லாம் முன் கூட்டியே அங்கு எழுதப் பட்டிருந் தது. வியாசர் திகைப்பில் ஆழ்ந்து கிடக்கையில் நாரதர் அங்கு வந்தார் ''என்ன மகாபாரத ஆசிரியரே! ஏன் இப்படித் திகைத்துப் போய் நிற்கிறீர்கள்?'' என்று கேட்டார். வியாசரும் அதற்கான காரணத்தைக் கூறினார்.

நாரதரும் ''அப்படியானால் நீங்கள் சொல்ல நினைத்ததை எல்லாம் முன் கூட்டியே அறிந்து விநாயகர் எழுதி வைத்து விட்டார் என்பது தெளிவாகத் தெரிகிறதே'' என்றார். வியாசரும் ''ஆமாம். இதை நான் சொல்லி விநாயகர் எழுதினார் என்பதை விட விநாயகர் எழுதிய தைத்தான் நான் படித்துச் சொன்னேன் என்றே கூற வேண்டும். வெற்றி கரமாக இந்த இலக்கியப் படைப்பு முடிந்தது என்றால் அது விநாயகரின் அருளால்தான்'' என்று கூறி கை கூப்பி நின்றார்.

விநாயகரும் வியாசர் முன்தோன்றி ''வியாசரே! உமது இந்த மகாபாரதம் அற்புதமான இலக்கியப் படைப் பாகும். எனக் கூறி ஆசீர்வதித்து விட்டு மறைந்தார். விநாயகர் தம் தந்தத்தை எழுத்தாணியாகக் கொண்டு எழுதி கொடுத்த மகாபாரதம் அழியாத உலக மா பெரும் இலக்கியமாகத் திகழ்கிறது.

(முடிவுற்றது)








ஒரு கிராமத்தில் சஞ்சீவி என்ற வியாபாரி இருந்தான். அவனுக்குப் பணம் தான் உயிர். ஆனால் அவளது மனைவி காமாட்சிக்குத் தன் கணவனின் கஞ்சத்தனம் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஆனாலும் தன் கணவனின் மனம் வருந்தாமல் இருக்க அவள் கூடிய வரையிலும் செலவுகளைக் குறைத்துக் கொண்டே வந்தாள். ஆனால் தானம், தர்மம் என்று ஏதாவது செய்ய விரும்பினால் அவள் அதைத் தன் கணவன் கையாலேயே செய்ய வைத்து வந்தாள்.

நிறையப் பணம் இருந்த போதிலும் அத்தம்பதிகளுக்கு ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. குழந்தை வேண்டுமென்று காமாட்சி எல்லா தெய்வங்களையும் வேண்டியும் தான, தர்மங்கள், பூஜைகள் என்றெல்லாம் செய்யலானாள். சஞ்சீவி அவற்றைத் தடுக்கவில்லை. இவ்வளவு செய்தும் குழந்தை பிறக்காததால் தன் எடைக்குச் சமமாய் நகையும் தன் கணவனுக்குக் கிடைக்கும் ஒருவருட லாபத்தை காணிக்கையாகச் செலுத்துவதாயும் தன் குலதெய்வத்திடம் அவள் வேண்டிக் கொண்டாள்.

இந்த வேண்டுதலுக்குப் பின் காமாட்சி கர்ப்பவதி ஆகி பத்தாவது மாதத்தில் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்போது அவள் தன் கணவனிடம் குல தெய்வத்திடம் தான் வேண்டிக் கொண்டதைக் கூறினாள். அதைக் கேட்ட சஞ்சீவி திகைத்து ''இதென்ன பைத்தியக்காரத்தன வேண்டுதல்! நீ வேண்டிக் கொண்ட துலாபாரத்திற்கும் ஒரு வருட லாபத்திற்கும் எவ்வளவு பணம் போகும் என்பது தெரியுமா? இது நடக்காது'' என்றான். காமாட்சியோ'' இது நம் குலதெய்வத்திற்கு வேண்டுதல். இதை நிறைவேற்றாவிட்டால் நமக்கு என்ன கெடுதல் நேரும் என்றோ நம் குழந்தையின் நிலை என்ன? ஆகும் என்றோ சொல்ல முடியாது. எனவே பிரார்த்தனையை செலுத்தியே தீர வேண்டும்'' என்றாள். அதைக் கேட்டபின் சஞ்சீவி

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வந்த கதை



அவளது வேண்டுதல் படி செய்யச் சம்மதித்தான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் சஞ்சீவி பிரார்த்தனையைச் செலுத்த தொலைவிலுள்ள தன் குலதெய்வக் கோவிலுள்ள ஊருக்குக் கிளம்ப தொடங்கினான். சஞ்சீவி வருட லாபம் ஆயிரம் ரூபாய் என்று கூறி எடுத்துக் கொண்டான். காமாட்சி தன் நகைகளை எல்லாம் அணிந்து கொண்டு புறப்பட்டாள். அவர்கள் வீட்டுக் கதவைப் பூட்டி விட்டுப் பார்த்த போது வீட்டுத் திண்ணையில் ஒரு பிச்சைக்காரன் உட்கார்ந்திருப் பதைக் கண்டார்கள்.

அவனும் ''நல்லது செய்ய கோவி லுக்கு போகிறீர்கள். இந்தப் பிச்சைக் காரனுக்கு ஏதாவது கொடுத்து விட்டுப் போங்கள். புண்ணியம் கிடைக்கும்'' என்றான். சஞ்சீவியோ ''புண்ணியமாவது புண்ணாக்காவது? உன்னால் எனக்குப் புண்ணியம் கிடைக்க வேண்டாம். எதுவும் கொடுக்க மாட்டேன், போ'' என்று எரிந்து விழுந்தான்.

ஆனால் காமாட்சியோ ''ஏன் இப் படி அவன் மீது கோபப்படுகிறீர்கள். ஏதாவது கொடுத்தால் குறைந்தா போய் விடும்?'' என்று கூறி மூன்று காசுகளை அவனது கப்பரையில் போட்டு விட்டுச் சென்றாள். அதைப் பார்த்த சஞ்சீவி முகத்தைச் சுளித்த வாறே ''இந்த மூணுகாசால் உனக்குப் புண்ணியம் கிடைத்து விடுமா? அது ஆழாக்கா அல்லது கால்படியா?'' என்று கேலியாகக் கேட்டான். காமாட்சியும் ''தானதர்மம் செய் வதை கேலி செய்யாதீர்கள்'' என்று கூறி அவனோடு சென்றாள்.

குலதெய்வக் கோவிலை அடைந்த தும் அவர்கள் குளித்து விட்டுக் கோவிலுக்குள் சென்றார்கள். அப் போது சஞ்சீவி ஆயிரம் ரூபாயை எடுத்து காமாட்சியிடம் கொடுத்து ''இது ஒரு வருட லாபப் பணம், இதை உண்டியலில் போடு. நம் வழிச்செலவுக்காகத் தனியாக ஆயிரம் ரூபாய் கொண்டு வந்திருக்கிறேன். அதை பத்திரமாக வைத்திரு'' என்று அந்தப் பணத்தையும் கொடுத்தான். காமாட்சி முதலில் ஆயிரம் ரூபாயை உண்டியலில் போட்டாள். பிறகு துலாபாரத்தில் தன் நகைகளோடு தன்

கணவன் வழிச் செலவிற்காக கொடுத்திருந்த ஆயிரம் ரூபாயையும் கைப்பிசகாக அவள் வைத்து விட்டாள்.

வேண்டுதல் முடிந்ததும் அவர்கள் தம் ஊருக்குப் புறப்பட்டார்கள். அப்போது சஞ்சீவி ''வழிச் செலவுப் பணத்தைக் கொடு'' என்றாள். அப்போது காமாட்சி ''அந்தப் பணத்தையும் சேர்த்து துலாபாரத்தில் வைத்து விட்டேனே'' என்று அவள் கூறவே சஞ்சீவி தலையில் அடித்துக் கொண்டு'' எல்லாப் பணமும் போய் விட்டதே. இப்போது நம் ஊருக்கு எப்படிப் போவது?'' என்று அழாத குறையாகக் கேட்டான். காமாட்சியும் ''நீங்கள் கணக்கில் ஏதோ தவறு செய்திருக்கிறீர்கள். அதனால் குல தெய்வம் தண்டித்து விட்டது. நடந்தே நம் ஊருக்குப் போவோம்'' என்றாள். அவர்களிடம் சிறிது பணம் கூட இல்லை. வழியில் கண்ட ஊர்களில் கெஞ்சிக் கேட்டு கிடைத்ததைச் சாப்பிட்டவாறே சென்றார்கள். சிரமப்பட்டு சில நாட்களுக்குப் பின் எப்படியோ தம் ஊருக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அப்போதும் பழைய பிச்சைக்காரன் தன் வீட்டுத் திண்ணையில் இருப்பதை சஞ்சீவி பார்த்தான். அவனைத் திட்ட ஆரம்பித்த போது ''அவனை ஏன் திட்டுகிறீர்கள்? நீங்கள் ஊரில் இல்லாத போது சில திருடர்கள் திருடுவதற்கு உங்கள் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களை இவன் அடித்து விரட்டி விட்டு இவன் தினமும் உங்கள் வீட்டைக் காவல் காத்து வருகிறான்'' என்றார்கள். சஞ்சீவி மலைத்துப் போய் நின்றான்.

அப்போது காமாட்சி ''பார்த்தீர்களா நான் தானமாகக் கொடுத்த மூன்று காசால் கிடைத்த புண்ணியத்தை! அதனால் தான் நம் வீடு வாசல், பணம் பண்டம் எல்லாம் கொள்ளை போகாமல் தப்பியது'' என்றாள். சஞ்சீவியும் ''தானதர்மம் செய்வதால் என்ன பலன் கிடைக்கும் என்பதைப் புரிந்து கொண்டேன். இனி மேல் நானும் அவற்றைச் செய்து வருவேன்'' என்றான். அதைக் கேட்ட காமாட்சி அகமகிழ்ந்தாள்!





# கணக்காய் எடுத்தான்!

மண்ணூரில் மாடன் என்பவன் அந்த ஊரின் பெரிய பண்ணையார் பெரிய சாமியிடம் வேலை செய்து வந்தான். மாடனை அவன் சிறுவனாக இருக்கும் போதே அவனது தந்தை அவனைப் பள்ளிக்கு அனுப்பாமல் பண்ணையாரிடம் வேலைக்குச் சேர்த்து விட்டான். அதற்குக் காரணம் மகனைப் படிக்க வைக்கப் பணம் இல்லாதது தான். தந்தை இறந்த பின் மாடனும் அவனது மனைவி மங்காவும் பண்ணையாரிடம் வேலை செய்தனர். அவர்களால் தம் மகன் ராமனைப் படிக்க வைக்க விரும்பியும் அவர்களால் அதைச் செய்ய முடியாமல் ராமனையும் பண்ணையார் வீட்டில் வேலைக்குச் சேர்த்து விட்டார்கள்.

ராமன் பெரியவன் ஆனதும் செல்லாயி என்ற பெண்ணை மணந்து கொண்டான். ராமன் சம்பாதித்தது போதாததால் செல்லாயியும் பண்ணையார் வீட்டில் வேலை செய்ய வேண்டியதாயிற்று. அவர்களுக்கு வேலன் என்ற மகன் பிறந்தான். ராமன் வேலனை எப்பாடு பட்டாவது படிக்க வைத்து வேறு நல்ல வேலையில் சேர்த்து விட விரும்பினான்.

பண்ணையார் வீட்டில் பண்ணையாரின் மனைவி பெரிய நாயகி சொல்வது தான் நடக்கும். பண்ணையார் அவள் கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டார். இதைத் தெரிந்த ராமன் பெரிய நாயகியை அணுகி ''நான் என் மகன் வேலனைப் பள்ளியில் சேர்த்து படிக்க வைக்க விரும்புகிறேன். அதற்கு நீங்கள் தாம் பணம் கொடுத்து உதவ வேண்டும்'' என்றான். அதைக்

பாபநாசம் சாமா

கேட்ட பெரிய நாயகி சற்று யோசித்து ''இதோ பார் ராமா! உங்கள் குடும்பம் பரம்பரை பரம்பரையாக எங்கள் வீட்டில் தான் வேலை செய்து வரு கிறது. நாங்கள் துணிமணிகள் கொடுத்து சாப்பாடும் அளித்து வருகி றோம். இதைவிட வேறென்ன வேண் டும்? வேலனை என் வீட்டில் வேலை செய்யச் சொல். அவனுக்கு மாதச் சம்பளம் என்று ஒரு தொகையை நான் சேர்த்து வைத்துக் கொண்டு வருகி றேன் அவனுக்கு இருபத்தைந்து வயதானதும் அவனுக்காக நான் சேர்த்து வைத்து வந்த தொகையை அவனிடம் கொடுக்கிறேன். வேண்டு மானால் அதைக் கொண்டு சுகமாக வாழலாம்'' என்றான்.

அதை பெரியசாமியும் சரி என்று கூறவே ராமன் வேறு வழி இல்லா மல் அதற்குக் கட்டுப்பட வேண்டிய தாயிற்று. இதற்குப் பின் வேலன் பெரியசாமியின் வீட்டில் வேலை செய்யலானான். ராமனும் செல்லாயி யும் மாந்தோப்பில் இருந்து தோப்பு வேலைகளைச் செய்ய வேண்டும் என்று பெரிய நாயகி தீர்மானிக்கவே அத்தம்பதிகள் மாந்தோப்பில் இருந்து வந்தார்கள். இப்படியே பல வருடங்கள் கழிந்தன. வேலனுக்கும் இருபத்தைந்து வயதாகி விட்டது. அப்போது செல்லாயி ராமனிடம்'' எஜமானி அம்மாள் வேலன் பெரியவ னானதும் அவனது சம்பளப் பணத் தை சேர்த்து வைத்துக் கொடுப்பதாகக் கூறினார்களே. இப்போது அதைக்



கேட்டு வாங்கி வாருங்கள். நாம் பட்டணத்திற்குப் போய் ஏதாவது தொழில் செய்து பிழைத்துக் கொள் வோம். பண்ணையாரிடம் நாம் செய் யும் வேலைக்கு முழுக்குப் போட்டு விடுவோம்'' என்றாள்.

ராமனும் பெரிய நாயகியிடம் போய் வேலனின் சம்பளப் பணத் தைக் கேட்டான். அவளோ ''பணம் ஏது? நீ உன் மனைவி வேலன் ஆகியோர் அவ்வப்போது நோய் வாய்ப்பட்டபோது வைத்திய செல வில் அது தீர்ந்து விட்டது'' என்றாள். அதைக் கேட்ட ராமன் பதில் எதுவும் பேசாமல் தோப்பிற்குத் திரும்பி வந்தான். அன்றிரவு மழை விடாது பெய்தது. பலத்த காற்றும் வீசியது. அதனால் மாந்தோப்பின் மாமரங்கள் சாய்ந்து விழுந்தன. அவற்றின்



காய்கள் எல்லாம் சிதறி விழுந்து நசுங்கிப் போயின.

மறுநாள் பெரியநாயகி தன் மாந் தோப்பிற்கு ஏதாவது பாதிப்பு ஏற்பட்டதா என்று பார்க்கத் தன் கணவனோடு வண்டியில் சென்றாள். தோப்பே முழுவதுமாக அழிந்து போயிருப்பது கண்டு இடிந்து போனாள். வண்டியிலிருந்து இறங்கி அவன் ராமனும் செல்லாயியும் வாழும் குடிசைக்குப் போய் ராமா என்று குரல் கொடுத்தாள். அப்போது செல்லாயி குடிசையிலிருந்து வெளியே வந்து ''அவர் இல்லையே! நேற்றிரவு ஒரு சன்னியாசி வந்தார். வெள்ளைத் தாடியும் கருத்த உடலும் கொண்ட அவரது முகத்தில் தெய்வீகக் களை தாண்டவமாடியது. அவர் தமக்குப் பசி எனவே எங்கள் அலுமினியத்தட்டில் சாதம்போட்டு ஒரு அலுமினிய டம்ளரில் மோர் ஊற்றிக் கொடுத்தோம். அவர் சாதத்தில் மோரை விட்டு சாப்பிட்டு விட்டு எதுவும் கூறாமல் போய் விட்டார். அதற்குப் பின் தட்டையும் டம்ளரையும் அலம்புவதற்காக எடுத் தேன். அவை தங்கத்தட்டாகவும் தங்க டம்ளராகவும் மாறி இருந்தன. அதைக் கண்டு நாங்கள் மகிழ்ந்து போனோம். என் கணவர் அதை விற்றுப் பணம் பெற்று வருவதாகக் கூறி அப்போதே இருட்டாக இருந் தும் கூடப் புறப்பட்டு பட்டணத் திற்குப் போனார். அந்தப் பணத்தைக் கொண்டு அங்கேயே ஏதாவது தொழி லை ஆரம்பித்து விட்டு என்னையும் வேலனையும் அழைத்துக் கொண்டு அங்கே போய் விடுவதாகக் கூறி இருக்கிறார். வேலனும் இப்போது ஒரு மகனுக்குத் தந்தையாக இருக் கிறான். அவன் மகனை அங்கே படிக்க வைக்கப் போகிறோம்'' என்றான்.

அதைக் கேட்ட பெரியநாயகி ''ஆ! அந்த சன்னியாசி தொட்ட தட்டும் டம்ளரும் தங்கமாகி விட்டதா! என்று பெரு மூச்சு விட்டவாறே கூறினாள். பிறகு அவள் தன் கணவனிடம் ''அந்த சன்னியாசி நம் வீட்டிற்கு வந்தி ருந்தால் எவ்வளவு நன்றாக இருந்தி ருக்கும்'' என்று கூறியவாறே அவனை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்குத் திரும்பி வந்தாள். அன்றும் மழை பெய்து கொண்டே

இருந்தது. பலத்த காற்றும் வீசிக் கொண்டிருந்தது. இரவு பத்து மணி இருக்கும். அப்போது தன் வீட்டு வாசல் கதவு தட்டப் பட்டது கேட்டு பெரியநாயகி எழுந்து போய்க் கதவைத் திறந்து பார்த்தாள். அங்கு வெள்ளைத் தாடியும் கறுத்த உடலும் கொண்டு சன்னியாசி ஒருவர் நிற்பதைக் கண்டு அவள் ஆச்சரியப் பட்டாள்.

அவரே முன் தினம் ராமனின் குடிசைக்கு வந்து தட்டையும் டம்ளரையும் தொட்டுத் தங்கமாக ஆக்கியவர் என்று அவள் நம்பினாள். அதனால் அவள் அவரை வரவேற்று ''உள்ளே வாருங்கள். பசித்திருப்பீர்கள். உணவு கொடுக்கிறேன். உண்டு இன்றிரவு இங்கே தங்கி இளைப்பாறுங்கள். நாளைக் காலையில் போகலாம்'' என்றாள். அவரும் உள்ளே சென்று சாப்பிட உட்கார்ந்தார். அவர் முன் ஒரு பெரிய அலுமினியத் தட்டை வைத்து பெரிய நாயகி உணவு பரிமாறினாள். குடிக்க ஒரு பெரிய அலுமினிய டம்ளரில் தண்ணீர் வைத்தாள். சன்னியாசியும் சாப்பிட்டு எழுந்தார்.

அப்போது பெரிய நாயகி ''என் அறையில் படுத்துக் கொள்ளுங்கள். அங்கு இரும்புப் பெட்டி மீது தலையணை வைத்திருக்கிறேன். அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். இரும்புப் பெட்டி மீதே படுத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறி அவரை அந்த அறைக்குள் கொண்டு போய் விட்டாள். அவர் இரும்புப் பெட்டி மீது படுத்துக் கொண்டதைக் கண்டு அவள் திருப்தி அடைந்தவளாய் அங்கிருந்து வேறு அறைக்குச் சென்று படுத்துத் தூங்கினாள்.

மறுநாள் பெரிய நாயகி காலையில் எட்டு மணிக்குத்தான் எழுந்தாள். அவள் உடனே தன் அறைக்குப் போய்ப் பார்த்தாள். இரும்புப்



பெட்டி திறந்திருந்தது அதிலிருந்த நகைகள் அப்படியே இருந்தன. பணத்தில் தான் ஐம்பதாயிரம் குறைந்திருந்தது.

அவள் ''ஆ! பணம் போயிற்றே. மாந்தோப்பு அழிந் தாலும் சன்னியாசி இந்த இரும்புப் பெட்டியைத் தொட்டால் இது தங்கமாகிவிடும் என்று எண்ணி ஆறுதல் அடைந்தேனே. ஆனால் அதுவும் நடக்கவில்லையே'' என்று புலம்பினாள்.

பெரியசாமி ஏதோ நினைவிற்கு வந்தது போல ''நீ வேலனின் சம்பளம் என்று எவ்வளவு சேர்த்து வைத்திருந்தாய்?'' என்று கேட்டான். பெரிய நாயகியும் ஐம்பதாயிரம் ரூபாய் எனவே பெரியண்ணனும் ''சரிதான் சன்னியாசி வேறு யாருமில்லை. நம் ராமனே. நீ அவனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை மட்டுமே இரும்புப் பெட்டியில் இருந்து எடுத்துக் கொண்டு போனான். நீ அவனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுக்காமல் ஏமாற்ற நினைத்தாய். நீ என்று அவனிடம் இல்லை என்று சொன்னாயோ அன்றிரவு உனக்கு தண்டனை கொடுப்பதுபோல கடவுள் உன் மாந்தோப்பையே நாசமாக்கி விட்டார். இதை எண்ணி மனதைத் தேற்றிக் கொள். நீ நன்கு வாழ வேண்டுமென்றால் மற்றவர்களையும் வாழ விட வேண்டும். தெரிந்ததா?'' என்றான்.

அவளும் ''சரி. எனக்கு புத்தி வந்தது. இனிமேல் பேராசைப் பட்டு யாரையும் துன்புறுத்த மாட்டேன் ராமன் தன் மகன் வேலனைப் படிக்க வைக்க விரும்பினான் அதைத் தடுத்தேன். இனி வேலனாவது தன் மகனைப் படிக்க வைத்து முன்னேறச் செய்யட்டும். இதுபோல் நம் ஊரிலேயே பல சிறுவர்கள் படிக்க முடியாமல் இருக்கிறார்கள். அவர்களுக்காக ஒரு பள்ளிக்கூடம் கட்டிக் கொடுக்கிறேன்'' என்றாள்.

பெரியசாமி அது கேட்டு ஆச்சரியத்தால் திகைத்து நின்றான்!





# திகைக்க வைத்த ஓவியம்!

பாரத நாட்டின் புகழ் பெற்ற ஓவியர் ஒருவர் கிரேக்க நாட்டிற்குச் சென்றார். அவரை அந்நாட்டுப் பொறியியல் கலைஞர் ஒருவர் வரவேற்றுத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கு அவர் ஓவியருக்குத் தனி அறையைக் கொடுத்து ''நீங்கள் தங்கி ஓய்வு எடுங்கள். நான் பணிப் பெண்ணை அனுப்புகிறேன். அவள் உங்களுக்கு கை, கால், முகம் கழுவிக் கொள்ளத் தண்ணீர் கொண்டு வந்து வைப்பாள். நான் சற்று வெளியே போய் என் வேலையை முடித்து விட்டு விரைவில் வந்து விடுகிறேன்'' என்று சொல்லி விட்டுப் போனார்.

ஓவியரும் சரியெனக் கூறி அமர்ந்திருந்தார். அப்போது பணிப் பெண் ஒரு குடத்தில் தண்ணீர் கொண்டு வந்து வைத்தாள். அவர் அவளிடம் பலகேள்விகள் கேட்டும் பதில் கிடைக்காததால் அவள் செவிடோ என்று எண்ணி அவள் கையைப் பிடித்து இழுத்து ''என்ன இது? நான் கேட்கக் கேட்க எதுவுமே பேசாமல் இருக்கிறாய். உனக்குக் காது கேட்காதா?'' என்று சற்றுக் கோபத்துடன் கேட்டார்.

ஆனால் மறு விநாடியே அந்தப் பெண் கீழே விழுந்தாள். அந்த இடத்தில் யந்திரத்தின் முறுக்கு ஆணிகள் போலப் பல உலோகப் பொருள்கள் சிதறி விழுந்தன. அப்போது தான் அந்த ஓவியருக்கு அது யந்திரப் பெண் என்று தெரிந்தது. அதை உருவாக்கிய பொறியியல் கலைஞரை மனதிற்குள் பாராட்டிய போதிலும் அவர் ஏன் அதைத் தன்னிடம் சொல்லவில்லை என்று மிக ஆத்திரப் பட்டார்.

உடனே தன் திறமையை அந்த கலைஞருக்குக் காட்டித் திகைக்க வைக்க வேண்டும் என்று எண்ணினார்.

- கௌரிநாதன் -

உடனே தான் தூக்குப் போட்டுக் கொண்டு தொங்குவது போல ஒரு படத்தை வரைந்து அறைக் கதவிற்கு எதிரே அவர் வைத்தார். பிறகு அறைக் கதவைக் கொஞ்சம் திறந்து வைத்து விட்டு அவர் ஒரு மூலையில் மரச் சாமான்களுக்கிடையே ஒளிந்து கொண்டார்.

சற்று நேரத்தில் பொறியியல் கலைஞர் அங்கு வந்தார். தனது விருந் தாளியின் அறைக் கதவு திறந்திருப் பது கண்டு அவர் வெளியில் நின்ற படியே அந்த அறைக்குள் பார்த்தார்.

தன் விருந்தாளி தூக்கில் தொங்கு வதைக் கண்டு அவர் அதிர்ச்சியுற்று திகைத்துப் போனார். தரைமீது தான் உருவாக்கிய யந்திரப் பெண் உருக் குலைந்து கிடப்பது கண்டு அவர் ''ஓகோ! ஓவியர் இதை உடைத்து விட்டாரா? அதனால் நான் என்ன சொல்வேனோ எனப் பயந்து தூக்குப் போட்டுக் கொண்டு விட்டார் போலிருக்கிறது இதை நான் உடனே ஊர்க் காவலதிகாரியிடம் தெரிவித்து விடவேண்டும்'' என்று எண்ணினார்.

உடனே அவர் காவலதிகாரியிடம் விஷயத்தைத் தெரிவிக்கவே அவரும் தம் ஆட்களோடு வந்தார். எல் லோரும் அந்த அறைக்குள் சென்றார் கள்.

ஒருவன் தூக்குக் கயிறை அறுக்கக் கத்தியை எடுத்தான். இன்னொருவன் தொங்கிக் கொண்டு இருக்கும் ஓவி யரின் கால்களைப் பிடிக்க ஓடினான். அப்போது பலமாகச் சிரித்தவாறே ஓவியர் அவர்கள் அருகே சென்று நின்றார்.

அதைக் கண்டு எல்லோரும் திகைத்து போனார்கள். அப்போது ஓவியர் பொறியியல் கலைஞரிடம் ''நீங்கள் யந்திரப் பெண்ணை உரு வாக்கி என்னைத் திகைக்க வைத்தீர் கள் அது பற்றி நீங்கள் என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை.

உங்கள் திறமையைப் பாராட்டு கிறேன். என் திறமையைக் காட்டவே இந்தச் சித்திரத்தை வரைந்தேன்'' என்றார்.

பொறியியல் கலைஞர் வெட்கித் தலை குனிந்து கொண்டார்.



சாந்தி புர மன்னன் சாந்திதேவனின் கட்டளைப்படி ராணி சாந்தகுமாரி தன்கைக் குழந்தையுடன் சுரங்கப் பாதை வழியாகத் தப்பிச் சென்றாள். சுரங்கத்திலிருந்து வெளியே வந்த குழந்தையை ஜெயானந்தர் கண்டார். ராணி அவரிடம் தன் குழந்தையை வளர்த்து வரும்படிக் கூறி உயிர்நீத்தாள். அவளது உடலைக் காக்க முனிவர் பாகா, பாகி என்ற புலிகளிடம் கூறினார்.

# சூர்யா

**5**

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

ஜெயானந்த முனிவர் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். புலிகள் பாகாவும் பாகியும் அவரருகே சென்றன.

முனிவர் அவற்றின் தலைகளைப் பரிவுடன் தடவவே, அவை அவரது கைகளை நக்கின.

"நான் உங்களிடம் ஒரு வேலையை ஒப்படைக்கிறேன். இன்றிரவு முழுவதும் இந்தப் பெண்ணின் உடலுக்குக் காவல் இருக்க வேண்டும்."

"யாரும் இந்த உடலைத் தொடக் கூடாது. எடுத்தும் செல்லக்கூடாது. நாளை இந்த உடலை அடக்கம் செய்வோம்."

தம்மிடம் கூறப்பட்டதைப் புரிந்து கொண்டது போல புலிகள் முனிவரின் புஜங்களைத் தொடத் தம் கால்களை உயர்த்தின.

புலிகள் இரண்டும் ராணியின் உடலைச்சுற்றிச் சுற்றி வந்து காவல் புரிவது கண்டு குருவும் சீடர்களும் திருப்தி அடைந்தார்கள்.


குழந்தையுடன் முனிவர் தம் சீடர்களோடு ஆசிரமத்தை அடைந்தார். அங்குள்ள பறவைகளும் மிருகங்களும் குரல் கொடுத்து அவர்களை வரவேற்றன.


கரடியே! குழந்தையை ஜாக்கிரதையாகக் பார்த்துக்கொள்.


இந்தப் பதக்கம் நீ யார் என்பதைத் தெரிவித்துவிடும். உன் நன்மைக்காக இதைக் கழற்றி விடுகிறேன்.


கரடியே! இனி இந்தக் குழந்தையைப் பாதுகாக்க வேண்டியது உன் பொறுப்பு.

முனிவரிடமிருந்து கரடி குழந்தையை வாங்கிக் கொண்டது மரத்திலிருந்து குரங்கு இறங்கி வந்தது. அணில், மான், நரி என்று பல மிருகங்களும் குழந்தையைச் சுற்றி நின்றன. அது கரடியின் மடியில் படுத்துக் கொண்டு சிரித்து மிருகங்களை பார்க்கலாயிற்று.



தொடரும்.






# தீட்டுங்கள் வண்ணத்தை

இந்த நண்பர்கள் குஷியாக உள்ளனர். இவர்களுக்கு நல்ல வண்ணங்கள் கொடுத்துக் களிப்படையுங்கள்.

# ஊகியுங்களேன்!

போலா தான் பிடித்ததை வீட்டிற்கு எடுத்துச் செல்கிறான். வலது புறம் உள்ள படங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதை பையில் பொருத்தி என்ன என்று பாருங்கள். போலா பிடித்ததில் எது இல்லாமல் போயிற்று?













## மாறுபாடுகள் யாவை?

இந்த இருபடங்களையும் நன்கு பார்த்து அவை எவ்வெவற்றில் மாறுபடுகின்றன என்று கண்டு பிடியுங்கள்.

(விடை 66ம் பக்கத்தில்)



## ஆச்சரியம்!

கரடிக்குத் தன் பாத்திரம் கிடைக்க வழியைக் காட்டுங்கள்.





# போட்டோ வாக்கியப் போட்டி



இந்த போட்டோக்களுக்கு
தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ
அல்லது சிறு வாக்கியங்களாகவோ
எழுதி அனுப்புங்கள்.



MAHANTESH C. MORABAD



K.S. SIVARKKAMANI

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு பிப்ரவரி 2004 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

அக்டோபர் 2003 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர் :

**A. அனந்தநாராயணன்**

3-G 95 ஃப்ளாட் 202,
சுமன் அபார்ட்மெண்ட்
கோரேபேட், நாக்புர்- 440010
மகாராஷ்டிரா.

பரிசு பெற்றவை





உற்சாகமுடன் அமர்ந்திருக்கும்
குழந்தைகள் இரண்டு
உற்றுப் பார்க்கும் கண்கள் இரண்டு.

## கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)

மாறுபாடுகள் யாவை? : 1. ஒரு பறவையின் தலையின் மயிர், 2. ஒரு பறவைக்கு ஒரே கால் தான், 3. பெரியவண்டு ஒன்றில் ஒரு இறகு இல்லை, 4. சிறிய வண்டு ஒன்றில் ஒரு சிறகு இல்லை, 5. ஒரு ஸ்பூனில் தேன் இல்லை, 6. பக்கெட்களில் மாறுபட்ட டிசைன்கள், 7. ஒரு மலர் இதழின் கோடு. 8. ஒரு வண்டின் மார்பில் குறி இல்லை.

**ஊகியுங்கள்!** : மான். மானில் வால் இல்லை.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

